வெண்மையாக
சலவை செய்யப்
பட்டுள்ளன...

பிரகாசமாக
சலவை செய்யப்
பட்டுள்ளன...

# ஸன்லைட் சோப்பினில் தான்




துணிகளை அடித்துத்துவைக்காமலே வெண்மையாகவும் பிரகாசமாகவும் சலவை செய்கிறது!

---

S. 152-50 TM




ஸெவன் ஓ'கிளாக் பிளேடுகள் ஜனாத் சகமான விலையில் முதல் தரமான ஷவரத்தை அளிக்கின்றன. மிகவும் சிக்கனமான முறையில் தற்காலத்துக்குகந்த ஷவர கம். ஸெவன் ஓ'கிளாக் பிளேடுகள் நேர்த்தியான எக்கிலிருந்து மிகவும் கூர்மையாக முனை தீட்டப்பட்டுத் தயாரிக்கப் படுகின்றன.

# 7 o'clock

## ஸெவன் ஓ'கிளாக் பிளேடுகள்




டாம்கோ பரிமள காஸ்டர் கூந்தல் தைலம் சிறந்த குணத்திற்கும் குளிர்ச்சி யூட்டும் தன்மைக்கும் பெயர் போன தயாரிப்பாகும். அது மயிர்க் கால்களுக்கு போஷணை தந்து ஆரோக்யமான கேச வளர்ச்சியைத் தூண்டுவதுடன், கூந்தலுக்கு ஆடவர், பெண்டிர் ஒன்றுபோல் ஆசைப்படும் மோகன காந்தியும் பளபளப்பும் அளிக்கிறது.

**டாம்கோ**

**பரிமள**

# காஸ்டர் கூந்தல் தைலம்

**ஒரு புதிய டாடா தயாரிப்பு**

**உங்கள் கைக்கடிகாரத்தை ரேடியோ சிலோன் — டாம்கோ டைமுக்குச் சரிபார்த்து வையுங்கள்**

ஏழு வருஷங்கள் அவஸ்தையின் பிறகு......





# கீல் வாயுவின்

# அடையாளமே தற்போது இல்லை

“க்ருஷன்” உபயோகிப்பதன் முன்னர், இம்மனிதன் பலவித உபாதைகளால் நிரந்தரமாகப் பீடிக்கப்பட்டிருந்தபோதிலும், அவ்வலிகள் எல்லாம் இப்பொழுது மறைந்துவிட்டன. அவரது அனுபவத்தை விளக்கும் கீழ்க்காணும் லெட்டர், மற்றும் வலிகளினால் அவஸ்தைப் படுபவர்களால் கவனிக்கத் தந்தது:—

**“ஆறு மாதங்கள் தொடர்ச்சியாக நான் “க்ருஷன்” சாப்பிட்டு அதன் பலனாக அடைந்த பயன்களையும், “க்ருஷனி”ன் உயர்ந்த தன்மையை மனமாறப் புகழ விரும்புகிறேன். சென்ற ஏழு வருஷங்களாக அடிக்கடி கீல்வாயு, முதுகு வலி, மலச்சிக்கல், மயக்கம் இவற்றால் கஷ்டப்பட்ட போதிலும் தற்போது, நான் இருபது வருஷத்திற்கு முன்பிருந்த நல்ல நிலையில் இருக்கிறேன். எனக்கு இப்போது 45 வயது: எனினும் இவ்வளவு ஆரோக்யத்துடன் முன்பு எப்பொழுதும் இருந்ததில்லை.” — A. P.**

கீல் வாதத்திற்கு முதற்படியான சிகிச்சை, குடல்களை நன்கு இயங்குமாறும், மூத்திரக் காய்களைச் சுத்தமாகவும் வைத்திருப்பதுதான். “க்ருஷன்” இவ்வேலையைச் சுலபமாகவும், யாதொரு அபாயமின்றியும் செய்கிறது. ஏனெனில் “க்ருஷன்” மலமிளக்கியாகவும், மூத்திரம் நன்கு வெளியேறச் செய்வதுமாக ஆன, இருவித வேலைகளை நன்கு செய்கிறது. ஹானியைத் தரும் புளிப்பு சத்தும் விஷப் பொருள்களும் செவ்வெனக் கழுவப்பெற்று மூத்திரக் காய்களின் வழியாக வெளியேற்றப் படுகின்றன. குடல்கள் இயற்கையாகவும் நிதானமாகவும் இயங்குமாறு தூண்டப்படுகின்றன. கீல்வாத சம்பந்தமான வலிகள் அடியோடு மறைந்து போவதும் புத்துயிர் பெற்ற சக்தியும், இளமையும் அதனின்று அடையும் கண்கண்ட பலன்கள்.




எல்லா வியாபாரிகளிடமும் கெமிஸ்டுகளிடமும் கிடைக்கும்.

KSID. 15

# ஸிங்கருக்கு ஒரு நூற்றாண்டு அனுபவம் இருக்கிறது



நீங்கள் ஸிங்கர் வாங்கும் பொழுது உங்களுக்கு அதிகச்சிதமான இயந்திரம்தான் என்பதுமட்டுமல்ல; ஒரு நூற்றாண்டின் சோதனையும் ஆராய்ச்சியும் கிடைக்கிறது. இந்த அனுபவம் தான் உங்கள் ஸிங்கரின் திறமையை உருவாக்கின்றது; இதற்கு உங்களுக்கு அதிகச் செலவும் ஆவதில்லை இன்றைய மாடல்கள் உங்கள் அருகிலுள்ள ஸிங்கர் ஷாப்பில் மகிழ்ச்சியுடன் இயக்கிக் காண்பிக்கப்படும். உங்களுக்கு ஏதேனும் கஷ்டம் இருந்தால் கீழ்க்கண்ட ஸிங்கர் மத்யவிற்பனை நிலையத்திற்கு எழுதுங்கள்:—



2/18, மவுண்ட் ரோடு
மதராஸ்-2

CAS. (B)

# உடல் வலிமையுள்ள குதூகலமான குழந்தைகளுக்கு

உங்கள் குழந்தைக்கு கிளாக்ஸோ கொடுப்பதால் அவனுக்கு பலமுள்ள கைகால்களும், ஒழுங்கான பற்களும், திடமான சதையும் வளர உதவுகிறீர்கள். மிகவும் சிறந்த பசும்பாலிலிருந்து தயாரித்த கிளாக்ஸோவில் விடமின் 'டீ'. அயம் மற்றும் ஆரோக்கியத்திற்கும், உடல் வலிமைக்கும் தேவையான சத்துக்கள் எல்லாம் சேர்க்கப்பட்டிருக்கின்றன. தேக ஆரோக்கியத்துடன் வளருவதற்கான உணவை அளிப்பதுதான், ஒரு தாய் தன் மகவுக்குச் செய்யக் கூடிய பேருதவி.




# Glaxo

கிளாக்ஸோ குழந்தைகளுக்கான பால் உணவு

கிளாக்ஸோ லேபரட்டரீஸ் (இந்தியா) லிட்., பம்பாய் • கல்கத்தா • மதராஸ்



L.A.S. (B)

# பொருள் அடக்கம்

கல்கி

| மலர் 10<br>இதழ் 46 | 1951 ஜூன் 17 | கர ௵<br>ஆனி 3உ |
|---|---|---|



"கல்கி"யில் வெளியாகும் கதைகளில் உள்ள பெயர்கள் எல்லாம் கற்பனைப் பெயர்களே; சம்பவங்களும் கற்பனையே.



அருப்புக்கோட்டை காங்கிரஸ் ஊழியரும் ராமநாதபுரம் ஜில்லா கூட்டுறவு பாங்க் டைரக்டரும் முனிசிபல் வைஸ் சேர்மனுமான ஸ்ரீ ஏ. பி. நாராயணனின் குமாரத்தி திருவளர்ச் செல்வி சரோஜினிக்கும், ஸ்ரீ க. மதி.க. நாராயண மூப்பனார் குமாரன் நமசிவாயம் B. Com.க்கும், மணமகன் இல்லத்தில் 18—6—1951ல் திருமணம் மிகச் சிறப்புடன் நடைபெற்றது.

திருமண வைபவத்திற்கு ஜெயராம் ரெட்டியார், எம்.எல்.ஸி. ராமநாதபுரம் ஜில்லா போர்டு தலைவர் ஸ்ரீ உடையப்பா, ராமநாதபுரம் ஜில்லா காங்கிரஸ் கமிட்டி காரியதரிசி ஸ்ரீ கே. எஸ். முத்துச்சாமி, விருதுநகர் "தமிழ்த் தென்றல்" ஆசிரியர் ஸ்ரீ வி. வி. ராமசாமி, முதலிய பிரபலஸ்தர்களும் பல ஜில்லா போர்டு மெம்பர்களும் மாகாண காங்கிரஸ் கமிட்டி மெம்பர்களும் ஸ்தல உத்தியோகஸ்தர்களும் விஜயம் செய்திருந்தார்கள்.

தம்பதிகளுக்கு இந்திய சர்க்கார் மந்திரி ஸ்ரீ ராஜாஜி, சென்னை சர்க்கார் முதல் மந்திரி ஸ்ரீ பி. எஸ். குமாரசாமி ராஜா, மராமத்து இலாகா மந்திரி ஸ்ரீ எம். பக்தவத்சலம், உணவு இலாகா மந்திரி ஸ்ரீ ரோச் விக்டோரியா, தமிழ்நாடு காங்கிரஸ் கமிட்டி தலைவர் ஸ்ரீ கே. காமராஜ், ஸ்ரீ என். எம். ஆர். சுப்பராமன் எம். எல். ஏ., கல்கி ஆசிரியர் ஸ்ரீ ஆர். கிருஷ்ணமூர்த்தி, கல்கி மானேஜர் ஸ்ரீ சதாசிவம் முதலிய பிரமுகர்களிடமிருந்து வாழ்த்துச் செய்திகள் வந்திருந்தன. மாகாணத்தின் பல இடங்களிலிருந்து வாழ்த்துத் தந்திகளும், பரிசுகளும் ஏராளமாக வந்திருந்தன.



# கல்கி

மலர் 10 | தமிழ்த்திரு நாடு தன்னைப் — பெற்ற
தாயென்று கும்பிடடி பாப்பா — பாரதியார் | இதழ் 46

# இது என்ன விநோதம்?

பெரிய தலைவர்கள் அல்லது பெரிய தேசங்கள் பெரிய தவறுகளைச் செய்து விட்டால், பெரிய விபரீதங்கள் ஏற்பட்டு அவற்றின் பலனை உலகமே தத்தளிக்கும்படி நேருவது உண்டு.

காஷ்மீர் பிரச்னையை ஒட்டி ஐக்கிய நாடுகள் சபை இப்போது செய்து வரும் பெரிய தவறை ஜவாஹர்லால்ஜி சுட்டிக் காட்டியுள்ளார்.

"காஷ்மீர் பிரச்னையைத் தீர்ப்பதில் தவறு நேருமாயின் அதனால் பல பயங்கரமான விளைவுகள் ஏற்படும். காஷ்மீரிலுள்ள நாற்பது லட்சம் மக்களின் விதி மாத்திரம் அல்ல, இந்தியாவின் விதியும் பாகிஸ்தானின் விதியுங்கூட அது நேர்மையாகத் தீருவதையே பொறுத்திருக்கிறது" என்று சென்ற வாரம் ஜவாஹர்லால்ஜி ஸ்ரீநகரில் பேசியபோது எச்சரித்தார்.

ஐ. நா. சபை நியமித்துள்ள மத்தியஸ்தர் விஷயத்தில் இந்தியாவின் கருத்தை, புதுடில்லியில் நடந்த பத்திரிகை நிருபர்கள் மகாநாட்டில் ஜவாஹர்லால் நேரு லவலேசமும் சந்தேகத்துக்கு இடமின்றித் தெளிவாக்கினார்.

"மத்தியஸ்தரை நாங்கள் மரியாதையுடன் வரவேற்கத் தயாராக இருக்கிறோம். ஆனால் அவரை மத்தியஸ்தராக நியமித்து ஐ. நா. பந்தோபஸ்து சபை நிறைவேற்றிய தீர்மானத்தை நாங்கள் அங்கீகரிக்கவில்லை. எனவே மேற்படி மத்தியஸ்தருடன் ஒத்துழைப்பது என்ற பேச்சே எழுவதற்கு இடமில்லை" என்று ஜவாஹர்லால்ஜி குறிப்பிட்டார்.

* * * *

முன்பு சீனாமீது ஜப்பானும் அபிஸீனியாமீது இத்தாலியும், ஆஸ்திரியாமீது ஜெர்மனியும் படையெடுத்தன அல்லவா? அந்த முக்கூட்டு வல்லரசுகளின் படையெடுப்புகள் ஆரம்பமான உடனேயே, அமெரிக்கா, பிரிட்டன், பிரான்ஸ் முதலிய நாடுகள் சர்வதேச சங்கத்தின் மூலம் தகுந்த நடவடிக்கைகள் எடுத்துக் கொண்டிருந்தால், சர்வதேச சங்கம் பிழைத்திருக்கும். இரண்டாவது மகா யுத்தக் கொடுமைகளும், அதன் விளைவாக இன்று முளைத்து வரும் புதிய புதிய பிரச்னைகளும் தவிர்க்கப்பட்டிருக்கும்.

சர்வதேச சங்கத்தில் நீதி வழங்கத் தவறிய வல்லரசுகளின் தவறுகள் சரித்திரத்தின் ஏடுகளில் பதிவாகியிருக்கின்றன.

அப்படியிருந்தும் மேற்படி வல்லரசுகள் அதே ஏடுகளையே இன்று திரும்பவும் வாசித்து வருகிறார்கள்; மறுபடியும் ஆய்ந்தோய்ந்து பாராமல் அதே தவறுகளையே செய்து வருகிறார்கள்.

சர்வதேச சங்கத்தின் ஸ்தானத்தில் இருக்கும் ஐக்கிய நாடுகள் சபையினால் நியமிக்கப்பட்ட ஒரு கமிஷன் அல்ல, இரண்டு கமிஷன்கள் காஷ்மீரில் பாகிஸ்தான் ஆக்கிரமிப்புக் குற்றம் புரிந்திருக்கிறது என்று தீர்ப்புக் கூறின.

ஆனால் முன்பு முக்கூட்டு வல்லரசுகளின் ஆக்கிரமிப்புக் குற்றங்களை மற்ற வல்லரசுகள் மெழுகி மறைத்ததைப் போல, பாகிஸ்தானின் குற்றத்தையும் இப்போது மறைக்க முற்பட்டிருக்கின்றன.

# பார்லிமெண்ட் காட்சிகள்

சேர்ந்தாற்போல ஐந்தரை மாத காலம் கூட்டம் நடந்த பின் இந்திய பார்லிமெண்ட் ஒத்திவைக் கப்பட்டது—
புது டில்லி செய்தி

1. பார்லிமெண்டில் பிரதம மந்திரி ஜவாஹர்லால்ஜியின் செல்வாக்கு எள்ளளவும் குறைய வில்லை என்பது வெளியாயிற்று...

மசோதா

மசோதா

மசோதா

மசோதா

மசோதா

2. ராஜாஜி பாடம் கற்பிக்க முயன்றார்; ஆனால் அதிக வெற்றி கிடைக்கவில்லை..

சுயாட்சி சர்க்கார்

3. ரயில்வே மந்திரி முதல்தர போர்ட்டராக விளங்கினார்..

என்ன ஐயா? இவ்வளவுதானா?

மூன்றாம் வகுப்புப் பிரயாணி

4. செல்வந்தர்களிடமிருந்து பணத்தைக் கறப்பதற்கு நிதி மந்திரி எவ்வளவோ சாகஸமெல்லாம் செய்து பார்த்தார்...

5. தற்காப்பு மந்திரி ஜீப் தகராறிலிருந்து தம்மை விடுவித்துக் கொள்ளப் படாத பாடு பட்டார்



⑥
நவீன வீடு கட்டும் திட்டம்
ஸ்ரீமதி அமிருத கௌரியைத்
திணற அடித்தது...




⑦ ..டாக்டர் அம்பேத்கார் எப்போதும் போல்
எதற்கும் முடியாது
என்று சொன்னார்...
நான் சொல்வதை
நம்புங்கள்




⑧ ..ஸ்ரீமதி துர்க்கா பாய் உண்மையில் துர்க்கா தேவி
யாகவே காட்சி
அளித்தார்...




⑨ இந்தக் கூட்டத்தில் கேள்விகளுக்குப் பதில் அளிக்க
மூன்று லட்சம் ரூபாய் செலவாயிற்றாம். இனி இவ்வளவு
செலவு ஏற்படாமல் தடுக்க நிதிமந்திரி தகுந்த நடவடிக்கை
எடுத்துக் கொள்வார் என்று
நம்புகிறோம்
அகமது
எச்.வி
காமத்

அது மாத்திரமல்ல, குற்றம் செய்துள்ள பாகிஸ்தானுக்காகப் பரிந்து பேசி வருகின்றன; குற்றத்தைச் சுட்டிக்காட்டிப் பரிகாரம் தேட முற்பட்ட இந்தியா மீது புகார் கூறுகின்றன.

காஷ்மீரின் எதிர்காலத்தை நிர்ணயிப்பதற்காகக் காஷ்மீர் தலைவர்கள் அரசியல் நிர்ணய சபையைக் கூட்டத் தீர்மானித்திருக்கிறார்கள் அல்லவா? அந்தக் கூட்டம் நடைபெறாமல் இந்தியா தடுக்க வேண்டுமாம்.

உலகத்தில் உள்ள ஒவ்வொரு நாட்டு மக்களுக்கும் தங்கள் தங்கள் அரசியலை நிர்ணயித்துக் கொள்ளப் பூரண உரிமை உண்டு என்பது ஐ. நா. சபை அரசியல் சாஸனத்தின் முக்கிய ஷரத்துகளில் ஒன்று.

இதுவரையில் சுதந்திர நாடுகள் யாவும் அரசியல் நிர்ணய சபையின் மூலமே தங்களுடைய எதிர்காலத்தை நிர்ணயித்துக் கொண்டிருக்கின்றன. மத்தியஸ்தரின் மூலம் தன் விதியை நிர்ணயித்துக்கொண்ட நாடு ஒன்றுகூட இல்லை.

அப்படியிருக்க, காஷ்மீருக்கு மாத்திரம் அந்த உரிமையை அளிக்க ஐ. நா. சபை ஏன் மறுக்க வேண்டும்? உலகத்தில் இதுவரையில் இல்லாத ஒரு விநோதமான அரசியல் கொள்கையைக் காஷ்மீர் விஷயத்தில் மாத்திரம் ஏன் கைக்கொள்ள முற்பட வேண்டும்?

# தான சூரர் சிவன்

பழம்பெரும் தேசபக்தரான ஸ்ரீ முனகல பட்டாபி ராமையா எம். எல். ஏ. அவர்களின் தலைமையில் தஞ்சாவூர் ஜில்லா திருநாகேசுவரத்துக்கு அடுத்த தேப்பெருமாள் நல்லூரில் சென்ற மாதம் ஒரு திருவிழா நடைபெற்றது. பரம ஏழையான ஒரு மனிதரின் ஞாபகார்த்தத் திருவிழா அது. அவர் பரம ஏழைதான். ஆனால் லட்சக்கணக்கான ஜனங்களுக்கு அவர் தம் வாழ் நாளில் அறுசுவை உண்டி அன்னமளித்தார். அதனால் "அன்னதான சிவன்" என்று பெயர் பெற்றார். இத்தகைய அதிசய மனிதரைப் பற்றிப் பேசும்போதுதான் ஸ்ரீ முனகல பட்டாபி ராமையா அவர்கள் சாணக்யரின் அர்த்த சாஸ்திரத்திலிருந்து ஒரு மேற்கோளை எடுத்துக் கூறினார். "வீரர்களுக்குள்ளே பெரிய வீரன் யார்!" என்ற கேள்விக்கு, "அதி சூரோ தான சூர:" என்று கௌடில்யர் பதில் கூறியிருக்கிறாராம். "அத்தகைய தான சூரர்களிலே அதி சூரர் அன்னதான சிவன்" என்றார் ஸ்ரீ முனகலா. ஏனெனில், அன்னதான சிவனுக்குச் சொந்தமான பொருள் இந்த உலகத்தில் ஒன்றுமே இருக்கவில்லை. ஒரு அடி நிலம் கிடையாது; ஒரு செப்புக் காசு கிடையாது. ஊர் ஊராகப் பிறரிடம் யாசகம் வாங்கித்தான் அவர் அன்னதானம் செய்தார். அற்ப சொற்பமான அன்னதானமல்ல. அவருடைய வாழ் நாளில் சுமார் ஐம்பது லட்சம் பேருக்கு அவர் சமாராதனை நடத்தியிருப்பார் என்றால், எப்படிப்பட்ட அற்புதம் பாருங்கள்!

சிவன் என்னும் எளிய மனிதர் ஒரு சமயம் ஒரு ஊரில் நடந்த கோயில் திருவிழாவுக்குப் போயிருந்தார். அங்கே வந்தவர்கள் சாப்பாட்டுக்குக் கஷ்டப்பட்டதைப் பார்த்தார். அடுத்த வருஷம் அந்தத் திருவிழா வருவதற்கு முன்னால் அவருடைய சொற்ப சொத்துக்களை விற்றார். விற்று வந்த பணத்தைக் கொண்டு திருவிழாவில் சமாராதனை நடத்தினார். அதனால் ஜனங்கள் அடைந்த திருப்தியைப் பார்த்தார். "இதுவல்லவா நாம் பிறவி எடுத்ததின் பயன்!" என்று உணர்ந்தார். யாத்ரீகர்கள் சாப்பிட்ட எச்சில் இலைகளில் விழுந்து புரண்டார். அதிலே எல்லையற்ற ஆனந்தம் அடைந்தார்.

பிறகு, அடுத்த ஊரில் நடந்த திருவிழாவுக்குச் சமாராதனை நடத்த எண்ணினார். இதற்கு வேண்டிய பொருள்களை யாசிக்கக் கிளம்பினார். அவர் கேட்டவர்கள் அனைவரும் "இல்லை" என்றது கொடுத்தார்கள். அவரும், "இல்லை" என்று சொல்வதற்கு இடம் வையாமல் தாம் அறிந்து, தகுதி அறிந்து, கேட்டார். "நீங்கள் பத்து மூட்டை அரிசி கொடுங்கள்" "நீங்கள் பத்து மணங்கு புளி அனுப்புங்கள்" என்று இவ்விதம் பொருள்களாகவே கேட்டுச் சேகரித்தார். கிடைத்தது அனைத்தையும் சரிவரப் பயன்படுத்தி மக்களுக்கு உணவு அளித்தார். இவ்விதம் அவர் நடத்தி வந்த அன்னதானத் திருப் பணியில் திருவானைக்காவல் கோயில் கும்பாபிஷேகத்தின் போது செய்த அன்னதானம் சிகரமாக அமைந்தது. அந்தச் சந்தர்ப்பத்தில் அன்னதான சிவன் சமாராதனையில் ஒரு லட்சம் பேர் உணவு அருந்தினார்கள்!

அன்னதான சிவன் சோழ நாட்டைச் சேர்ந்தவர் என்று சொல்ல வேண்டியதில்லை. இத்தகைய அன்னதான வைபவங்கள் சோழ நாட்டிலே தான் நடைபெற முடியும். "சோழ நாடு சோறுடைத்து" என்ற தமிழ் மூதாட்டியின் வாக்கு இன்றளவும் நிறைவேறி வருகிறது. இன்றைக்கும் தஞ்சாவூர் ஜில்லாவில் விளையும் அதிகப்படி நெல்தான் தமிழ்நாட்டில் மற்ற எல்லா ஜில்லாக்களின் பற்றாக்குறையை நிரப்பி வருகிறது. தஞ்சை ஜில்லா தமிழ் நாட்டுக்கே அன்னதானம் செய்து காப்பாற்றி வருகிறது என்று சொல்வதும் பொருந்தும்.

அப்படியிருந்தும் தஞ்சை ஜில்லா கிராமங்களில் நமது சுயராஜ்ய சர்க்காரின் கொள்முதல் அதிகாரிகளும் மற்ற உத்தியோகஸ்தர்களும் செய்யும் கெடுபிடிகளைக் கேட்கும் போது மிகவும் வருத்தமாயிருக்கிறது. ஒரு

அதிகாரமும் இல்லாதவரும், இடுப்பில் நாலு முழ அழுக்கு வேட்டியுடன் ஊர் ஊராக நடந்து சென்றவருமான அன்னதான சிவனுக்கு இனமாக அள்ளிக் கொடுத்தவர்கள் இப்போது தமிழ் நாட்டில் சேர்ந்திருக்கும் பஞ்ச நிலைமையில் பணம் வாங்கிக்கொண்டு விலைக்குக் கொடுக்கமாட்டார்களா! கட்டாயம் கொடுப்பார்கள்! முறையாகக் கேட்டால் நன்றாகக் கொடுப்பார்கள்! கெடுபிடியும் பலாத்காரமும் கொஞ்சமும் அவசியமில்லை.

ராஜாஜி தற்சமயம் தமிழ்நாட்டில் இருந்தால் என்ன முறையில் வேலை செய்திருப்பார்கள் என்று நாம் ஊகித்துக் கொள்ளலாம்: கிராமம் கிராமமாகச் சுற்றுப் பிரயாணம் செய்வார்கள். "அதிகப்படியாக ஒரு மணி நெல் கூட வைத்துக் கொள்ளாமல் கொடுத்து விடுங்கள்!" என்று வேண்டிக் கொள்வார்கள். தஞ்சை ஜில்லா விவசாயிகளும் தாராளமாய் மனமுவந்து கொடுப்பார்கள். தங்களுக்கு வேண்டியதை விடக் கொஞ்சம் குறைவாக வைத்துக்கொண்டும் கொடுப்பார்கள். கொள்முதல் அதிகார வர்க்கத்துக்காக இப்போது செலவாகும் கோடிக்கணக்கான ரூபாய் அரசாங்கத்துக்கு மிச்சமாகும்.

போகட்டும்; பொதுத் தேர்தல் நெருங்கும் இச்சமயத்திலாவது கிராமங்களில் அதிக்கிரம அதிகார கெடுபிடிகள் நடக்காமல் நமது சென்னை சர்க்கார் பார்த்துக் கொள்ள வேண்டும். இது சம்பந்தமாகச் சென்னைப் பிரதமர் கனம் பி. எஸ். குமாரசாமி ராஜா நேராகக் கவனம் செலுத்தி வருகிறார் என்று அறிந்து மகிழ்ச்சி அடைகிறோம்.

• • •

தேப்பெருமாள் நல்லூர் சிவனுடைய அற்புத வாழ்க்கையை அறிந்து போற்றும் அன்பர்கள் சிலர் சேர்ந்து "அன்னதான சிவன் ஞாபகார்த்தச் சங்கம்" ஒன்று நிறுவியிருக்கிறார்கள். அந்தத் தான சூரர் பெயரினால் "ஏழை அநாதைகளின் சகாய நிதி" ஒன்று நிறுவத் திட்டமிட்டிருக்கிறார்கள். இருவகைப் பயன் தரக்கூடிய இந்தத் திருப்பணிக்கு அனைவரும் உதவிசெய்ய வேண்டுகிறோம். மேலும் இத் திருப்பணி பற்றிய விவரங்கள் அறிய விரும்புவோர் "அன்னதான சிவன் ஞாபகார்த்த சங்கம், 30, வாலாஜா ரோடு, மவுண்ட் ரோடு, சென்னை" என்ற விலாசத்துக்கு எழுதித் தெரிந்து கொள்ளலாம்.

# ஏழு கிரகங்கள் உச்சம்!

உங்கள் "கல்கி" பத்திரிகையில் "என்ன சேதி!" என்ற தலைப்புப் பலகாலம் வெளியாகி வந்தது. ஆனால், சொல்லுவதற்கு நல்ல செய்தி வெகு காலமாகக் கிடைக்காமற் போகவே நமக்குப் பிரமாதமான கோபம் வந்துவிட்டது. கோபம் வந்து வேறு என்ன செய்ய! "என்ன சேதி!" என்ற தலைப்பையே சில மாதங்களுக்கு முன்பு எடுத்துப் போட்டு விட்டோம்.

பிறகு, செய்திகளுக்கும் ரோஷம் வந்து விட்டதாகக் காண்கிறது. ஒரு நல்ல செய்தி— முதல்தரமான நல்ல செய்தி — இப்போது கிடைத்திருக்கிறது. தமிழ் நாட்டிலும் இந்தியா தேசத்திலுமே இவ்வளவு நல்ல செய்தி சென்ற ஒரு வருஷத்தில் நமக்குக் கிடைத்ததில்லை.

தமிழ் நாட்டுக்கு உண்மையிலேயே நல்ல காலம் பிறந்து விட்டதாகக் காண்கிறது. அரசியல் வானத்தில் ஏழு கிரகங்கள் சேர்ந்தாற் போல் உச்சமாகி யிருக்கின்றன! எல்லாம் சுபக் கிரகங்களாகவே இருக்கும் என்று நம்புவதற்கும் இடம் இருக்கிறது.

ஜூன் மீ 10உ தமிழ் நாடு காங்கிரஸ் கமிட்டியின் கூட்டம் கூடியது. மொத்தம் 258 அங்கத்தினரில் 211 அங்கத்தினர் ஆஜராகி யிருந்தார்கள். வந்திருந்தவர்கள் அத்தனை பேரும் சேர்ந்து ஏக மனதாக மாகாணத் தேர்தல் கமிட்டிக்கு ஆறு அங்கத்தினரைத் தேர்ந்தெடுத்தார்கள். தலைவரையும் சேர்த்து ஏழு அங்கத்தினர் ஆனார்கள்.

தேர்ந்தெடுக்கப்பட்டவர்கள்: ஸ்ரீ ஓமந்தூர் ராமசாமி ரெட்டியார், ஸ்ரீ பி. எஸ். குமாரசாமி ராஜா, ஸ்ரீ எம். பக்தவத்ஸலம், ஸ்ரீ கெ. பி. கட்டையா, ஸ்ரீ டி. டி. கிருஷ்ணமாச்சாரி, ஸ்ரீ கெ. பெருமாள்சாமி ரெட்டியார். இக்கமிட்டிக்கு ஸ்ரீ காமராஜ் நாடார் சேர்மனாக இருப்பார்.

சண்டை சச்சரவுகள் இல்லாமல், வாதப்பிரதிவாதங்கள் இல்லாமல், அத்தனை அங்கத்தினரும் ஒரு முகமாகவும் ஒற்றுமையாகவும் மேற்படி கமிட்டியைத் தேர்ந்தெடுத்தது முக்கிய விசேஷம். இதன் பொருட்டுத் தமிழ் நாட்டுக் காங்கிரஸ் கமிட்டி அங்கத்தினரைப் பெரிதும் பாராட்டுகிறோம்.

ஒற்றுமை நல்லது; மிக அவசியமானது. ஆனால் ஒற்றுமை மட்டும் போதுமா! ஒற்றுமையாகத் தவறான காரியங்களையே செய்து வரலாம் அல்லவா! ஒற்றுமையாக நல்ல காரியங்களைச் செய்தால்தான் ஒற்றுமையின் பலன் சித்திக்கும்.

ஏழு அங்கத்தினர் கமிட்டியின் வேலை இலகுவானதல்ல. பொறுப்புள்ள கடினமான வேலை. இவர்கள் செய்யும் பூர்வாங்க வேலையைப் பொறுத்தே காங்கிரஸின் எதிர்காலமும் தேசத்தின் எதிர்காலமும் அமைய வேண்டும்.

வரப்போகும் பொதுத் தேர்தலில் நிற்பதற்கு மாகாண சட்டசபைக்கும் மத்திய பார்லிமெண்டுக்கும் அபேட்சகர்களைப் பொறுக்கி எடுத்துச் சிபார்சு செய்வதே மாகாண தேர்தல் கமிட்டியின் வேலை. இவர்களால் சிபார்சு செய்யப்பட்ட அபேட்சகர்களை மத்திய தேர்தல் கமிட்டி ஊர்ஜிதம் செய்ய வேண்டும்.

பொறுக்குகிற அபேட்சகர்களுக்குப் பல குணாதிசயங்கள் இருக்க வேண்டும். அவர்கள் யோக்யர்களாகவும் நல்லவர்களாகவும் இருக்க வேண்டும். அப்படி யிருந்தால் போதுமா! போதாது. அவர்களுக்கு அறிவும் திறமையும் இருக்க வேண்டும். ஏதோ கொஞ்சம் படிப்பும் இருந்து விட்டால் நல்லது. சட்ட சபைகளில் விவாதத்துக்கு வரும் விஷயங்களைப் புரிந்து கொண்டு தக்க யோசனைகளைச் சொல்லக் கூடியவர்களா யிருக்க வேண்டும் அல்லவா!

இவ்வளவும் இருந்தாலும் போதாது. அந்தத் தொகுதியில் பொது ஜனங்களிடையே ஓரளவேனும் ஊழியம் செய்து நல்ல பெயர் வாங்கியிருக்க வேண்டும். ஒரு தொகுதியில் உள்ள வோட்டர்களுக்குக் கொஞ்சமும் பழக்கமில்லாத அயலூர்க்காரர்களைக் கொண்டு வந்து போடக் கூடாது. இவ்வளவோடு, பிற்பட்ட சமூகங்களுக்கு நியாயமான பிரதிநிதித்துவம் இருக்கிறதா என்றும் பார்க்க வேண்டும். இன்றேல், சேலம் ஏ. சுப்பிரமணியம் போன்றவர்கள் சும்மா விட மாட்டார்கள்.

இப்படிப் பல சிக்கல்கள் நிறைந்த காரியத்தை ஏழு அங்கத்தினர் கொண்ட கமிட்டியார் திறம்பட நடத்தி வைப்பார்கள் என்று நம்புகிறோம்.

“யாரை அபேட்சகராகப் பொறுக்குவது!” என்ற கேள்விக்குப் பதில் சொல்வதைக் காட்டிலும், “யாரைப் பொறுக்கக் கூடாது!” என்ற கேள்விக்கு விடை சொல்வது எளிது. பொது மக்களைக் கேட்டால், “உங்களுக்குப் புண்ணியமாய்ப் போகட்டும்; இப்போதுள்ள எம். எல். ஏ.,க்களைத் தயவு செய்து திரும்பவும் பொறுக்காதீர்கள்!” என்பார்கள்.

ஆனால் இது கமிட்டியின் காதில் ஏறும் என்று சொல்வதற்கில்லை. ஏனெனில், கமிட்டியில் உள்ள ஏழு அங்கத்தினர்களில் ஆறு பேர் இப்போதுள்ள சட்டசபை அல்லது பார்லிமெண்டில் அங்கத்தினரா யிருப்பவர்கள்.

இதெல்லாம் ஒருபுறமிருக்க, காங்கிரஸ் வரப்போகும் தேர்தலில் அமோகமான வெற்றி பெறுவதற்குத் தக்க அபேட்சகர்களைப் பொறுக்கி எடுப்பது மட்டுமே போதாது. அதற்கு மேலே இன்னும் ஒன்றும் செய்ய வேண்டும். காங்கிரஸ் மீண்டும் அதிகாரத்துக்கு வந்தால் என்ன செய்யப் போகிறது என்பதற்குத் திட்டம் வகுக்க வேண்டும். “இதுவரையில் என்ன சாதித்தீர்கள்! இனிமேல் என்ன சாதிக்கப் போகிறீர்கள்!” என்று பொதுமக்கள் கட்டாயம் கேட்பார்கள். “சுயராஜ்யம் வருவதற்கு முன்னால் ஏதேதோ செய்யப் போவதாகச் சொன்னீர்களே!” என்பதையும் சுட்டிக் கேட்பார்கள். அப்படியெல்லாம் ஒன்றும் கேட்காமல் பொதுமக்கள் ஆடுமாடுகளைப்போல் ஓட்டிய இடத்துக்குச் சென்று ஓட்டுப் போட்டு விடுவார்கள் என்று நினைப்பது பெருந்தவறாக முடியும்.

# பூலோகமா? கைலாசமா?

“சீடா! இது பூலோகமா! கைலாசமா!” என்று கேட்டாராம் ஒரு குரு. அந்தக் குருவின் மனோநிலையில் இருக்கிறார் நம் ஜவாஹர்லால்ஜி என்று தோன்றுகிறது. இல்லாவிட்டால் ஸ்ரீ எச். ஜி. முட்கல் என்னும் பார்லிமெண்டு அங்கத்தினரைப் பற்றி இவ்வளவு தடபுடலான விசாரணையை ஏற்படுத்தி யிருப்பாரா!

மேற்படி ஸ்ரீ எச். ஜி. முட்கல் பம்பாயிலுள்ள தங்கம்—வெள்ளி வர்த்தகர்களின் வசதிகளைக் கவனிப்பதாகச் சொல்லி, அதற்காகச் செலவுக்கு ரூ. 3000 வாங்கிக் கொண்டதாகப் புகார் வந்ததாம். இது முறை தவறான காரியம் என்று ஜவாஹர்லால் கருதி அதைக் குறித்து விசாரணை செய்ய பார்லிமெண்டரி அங்கத்தினர் கொண்ட கமிஷனை நியமிக்க வேண்டும் என்று பார்லிமெண்டில் தீர்மானம் கொண்டு வந்தார். தீர்மானம் ஏகமனதாக நிறைவேறியது. கமிஷனும் நியமிக்கப் பட்டது. “விசாரணைக் கமிஷன் ஏற்படுத்தியது பற்றி எனக்கு மிக்க மகிழ்ச்சி. நான் செய்ததில் முறைத்தவறு ஒன்றுமில்லை என்று கமிஷன் முடிவு செய்யும் என்பது நிச்சயம்” என்று ஸ்ரீ முட்கல் என்பவரும் விசாரணையை வரவேற்றிருக்கிறார்.

ஸ்ரீ முட்கல் மனதிற்குள்ளே குலுங்கக் குலுங்கச் சிரித்திருக்கவும் கூடும். “நான் செய்தது முறைத்தவறு என்று தீர்மானமானால், மற்றவர்களுடைய விஷயமெல்லாம் என்ன ஆவது! இந்தப் பார்லிமெண்டின் கதிதான் என்ன ஆவது!” என்று எண்ணி அவர் சிரித்திருப்பார்.

ஒரு பொது விசாரணைக் கமிஷன் ஏற்படுத்தினால், ஸ்ரீ முட்கல் செய்ததாகச் சொல்லப்படுவது போன்ற காரியங்களைப் பார்லிமெண்டிலும் மாகாண சட்டசபைகளிலும் இன்னும் பலர் செய்திருப்பதாக வெளியாகலாம்.

விசாரணையைப் பின்வரும் முறையில் நடத்துவது உண்மையில் உபயோகமாயிருக்கும்.

ஒவ்வொரு சட்டசபை அங்கத்தினரும் பார்லிமெண்ட் அங்கத்தினரும் அவர்கள் அங்கத்தினராகும் போது எவ்வளவு சொத்து உடையவர்களாயிருந்தார்கள், இப்போது எவ்வளவு சொத்து அவர்களுக்கு இருக்கிறது என்று விசாரணை செய்து கண்டு பிடிக்க வேண்டும். சட்டசபை அங்கத்தினருடைய மாதச் சம்பளம் ரூ. 150 என்பது தெரிந்த விஷயம். ஐந்து வருஷத்துக்கு முன்பு சொத்து ஒன்றும் இல்லாதவரா யிருந்தவர் இப்போது லட்சக் கணக்கில் சொத்துச் சேர்த்திருந்தால், அது சம்பளத்திலிருந்து சேர்த்திருக்க முடியாதல்லவா! வேறு எந்த வழியில் அவர் அவ்வளவு பணம் சேர்த்தார் என்னும் விவரம் சொல்லியாக வேண்டும் அல்லவா!

நல்ல வேளையாக, இதற்கு நம் ஜவாஹர்லால் நேரு அவர்களே உபாயம் ஒன்று தந்திருக்கிறார். “குதிரைப் பந்தயத்தை அவசரப்பட்டு ஒழித்து விட வேண்டாம்!” என்று அவர் மாகாண சர்க்கார்களுக்கு யோசனை சொல்லியிருக்கிறார் அல்லவா! ஆகையால் சட்டசபை அங்கத்தினர்கள் “குதிரைப் பந்தயத்துக்குப் போய்ப் பணம் கட்டிச் சம்பாதித்தோம்” என்று சொல்லிக் கொள்ளலாம். ஆனால் அங்கேயும் கூடப் பணம் கட்டியதற்கும் ஜெயித்ததற்கும் ஏதேனும் கணக்கு உண்டே, என்னமோ! அப்படியானால் அந்தக் காரணத்தையும் சொல்லிக்கொள்ள முடியாதுதான்!

ஆம்; ‘தியாக பூமி’யாகக் கிடைத்த பத்து ஏக்கரா பொட்டல் நிலத்தில் விவசாயம் செய்து சம்பாதித்தேன் என்று சொல்லிக் கொள்ளலாம்! அதை யார் மறுக்க முடியும்?

# பொன்னியின் செல்வன்

கல்கி

## அத்தியாயம் 10

## அநிருத்தப் பிரமராயர்

இந்தக் கதையின் ஆரம்ப காலத்திலேயே நமக்கு நெருங்கிப் பழக்கமான ஆழ்வார்க்கடியான் நம்பியைக் கொஞ்ச காலமாக நாம் கவனியாது விட்டு விட்டோம். அதற்காக நேயர்களிடமும் நம்பியிடமும் மன்னிப்புக் கோருகிறோம். முக்கியமாக, நம்பியின் மன்னிப்பை இப்போது நாம் கோரியே தீர வேண்டும். ஏனெனில் ஆழ்வார்க்கடியான் இப்போது வெகு வெகு கோபமாயிருக்கிறான்! அவனுடைய முன் குடுமி இராமேசுவரக் கடற்கரையில் அடிக்கும் காற்றில் பறந்து கொண்டிருக்கிறது. அவனுடைய கைத் தடியோ தலைக்கு மேலே சுழன்று கொண்டிருக்கிறது. அவனைச் சுற்றி ஆதி சைவர்களும் வீர சைவர்களும் பலர் சூழ்ந்து கொண்டிருக்கிறார்கள். அவர்களுடைய ஆர்ப்பாட்டம் பலமாக இருப்பதால், ஆழ்வார்க்கடியானுடைய கதி யாதாகுமோ என்று நமக்குக் கொஞ்சம் கவலையாகவு மிருக்கிறது. எனினும் நம்பியின் நரசிம்மாவதாரத் தோற்றமும் அவனுடைய கைத் தடி சுழலும் வேகமும் அந்தக் கவலையைப் போக்குகின்றன.

வந்தியத்தேவனும் இளைய பிராட்டியும் பேசியதை ஒட்டுக் கேட்ட ஆழ்வார்க்கடியான் பழையாறையிலிருந்து அன்றைய தினமே புறப்பட்டான். வாயு வேக மனோவேகமாகத் தென் திசையை நோக்கிச் சென்றான். வழியில் எங்கும் அவன் சைவ வைஷ்ணவச் சண்டையில் இறங்க வில்லை. காரியத்துக்குக் குந்தகம் வரக்கூடாதென்று மனதைக் கட்டுப்படுத்திக் கொண்டு வலுவில் வந்த சண்டைகளைக் கூட வேண்டாம் என்று ஒதுக்கித் தள்ளிவிட்டு, நடந்தான். மதுரையில் சிறிது நேரம் தங்கினான். அங்கு அவன் அறிய விரும்பிய செய்தியை விசாரித்து அறிந்து கொண்டு இராமேசுவரத்துக்குப் புறப்பட்டான்.

வந்தியத்தேவன் பூங்குழலியின் படகில் சென்று இலங்கைத் தீவில் இறங்கிய அதே நாள் மாலையில் ஆழ்வார்க்கடியான் நம்பி இராமேசுவரம் வந்து சேர்ந்து விட்டான்.

அந்தப் புண்ணிய பூமியை மிதித்த உடனே ஆழ்வார்க்கடியானுடைய மனதில் அத்தனை நாளும் அடங்கிக் கிடந்த வைஷ்ணவ ஆர்வம் கரையை உடைத்துக் கொண்டு பொங்கிவிட்டது. இராமேசுவரத் தீவில் எங்கெங்கும் மொய்த்துக் கொண்டிருந்த வீர சைவ பட்டர்கள் அந்த ஆர்வத்துக்குத் தூபம் போட்டு விட்டார்கள். அந்தப் புண்ய ஸ்தலத்துக்கு வரும் யாத்ரீகர்களுக்கு வழி காட்டி அழைத்துச் சென்று பற்

பல தீர்த்தங்களிலும் ஸ்நானம் பண்ணி வைப்பதும், ஆலயத்தில் மூர்த்தி தரிசனம் செய்து வைப்பதும், அந்தந்தத் தீர்த்தம்—மூர்த்தி விசேஷங்களை எடுத்துச் சொல்லுவதுமே அவர்களுடைய அலுவல்கள். எனவே, புதிய யாத்ரீகர்களைக் கண்டதும் பட்டர்கள் பலர் சென்று சூழ்ந்து கொள்வார்கள். அவ்விதமே ஆழ்வார்க்கடியானையும் சுற்றி மொய்த்துக் கொண்டார்கள்.

"அப்பனே! வா! வா! இந்த ஸ்தலத்திலுள்ள அறுபத்து நான்கு தீர்த்தங்களில் ஸ்நானம் செய்து உன் தேகத்தில் தரித்திருக்கும் வைஷ்ணவ பாஷாண்ட சின்னங்களைக் கழுவித் துடைத்துக் கொள்! இராமரின் பிரம்மஹத்தி தோஷத்தைப் போக்கிய ஸ்தலம் அல்லவா இது? வைஷ்ணவ பாஷாண்ட மத சின்னங்களை நீ அணிந்ததினால் ஏற்பட்ட பாவங்களையும் போக்கிக் கொள்ளலாம்!" என்று ஒரு பட்டர் விந்நியாசமாகப் பேசினார்.

இன்னொருவர் குறுக்கிட்டு, "இராம தீர்த்தம், லக்ஷ்மண தீர்த்தம், ஆஞ்சநேய தீர்த்தம், சுக்ரீவ தீர்த்தம்—இப்படி அறுபத்து நாலு தீர்த்தங்கள் இருக்கின்றன. ஒவ்வொருவரும் அந்தந்தத் தீர்த்தத்தில் தலை முழுகி அவரவர்களுடைய தோஷத்தைப் போக்கிக் கொண்டார்கள். நீ என்னுடன் முதலில் ஆஞ்சநேய தீர்த்தத்துக்கு வா! வைஷ்ணவ சின்ன தோஷத்துக்குச் சரியான சங்கல்பம் பண்ணி வைக்கிறேன்!" என்றார்.

மற்றொரு பட்டர் "அப்பனே! இவர்கள் சொல்வதைக் கேளாதே! இராமர் இராவணனைக் கொன்ற பிரம்மஹத்தி தோஷத்தைப் போக்கிக் கொள்வதற்காகச் சமுத்திர மணலைப் பிடித்து வைத்துச் சிவலிங்கமாக்கிப் பூஜித்த இடத்துக்கு உன்னை நேராக அழைத்துப் போகிறேன்!" என்றார்.

ஆழ்வார்க்கடியான் கண்ணில் தீப்பொறி பறக்க எல்லாரையும் ஒரு தடவை விழித்துப் பார்த்து, "நிறுத்துங்கள் உங்கள் அபத்தப் பேச்சை! முதலில் நீங்கள் சொன்ன தீர்த்தங்களினால் உங்களுடைய நாவை அலம்பி உங்கள் பாவத்தைத் தீர்த்துக் கொள்ளுங்கள்!" என்றான்.

"ஓஹோ! இராமன், லக்ஷ்மணன் என்றெல்லாம் சொன்னதனால் எங்களுக்குப் பாவம் வந்திருக்கும் என்று நினைக்கிறாயா? அப்படி ஒன்றுமில்லை. இந்த க்ஷேத்திரத்துக்குப் பெயரே இராமேச்சுவரம். இராமர் ஈசுவரனாகிய சிவ பெருமானைப் பூஜை செய்து பாவத்தைப் போக்கிக் கொண்ட இடம். அத்துடன் இராமர் என்ற பெயரில் இருந்த தோஷமும் போய் விட்டது!" என்றார் ஒரு வீர சைவ பட்டர்.

"ஓ அஞ்ஞான சிரோமணிகளே! ஏன் இப்படித் தலைக்குத் தலை உளறுகிறீர்கள்? இந்த ஸ்தலப் பெயரின் அர்த்தம் இன்னதென்பதையே நீங்கள் தெரிந்து கொண்டபாடில்லை!"

"நீதான் சொல்லேன், பார்ப்போம்!"

"பிரம்மாவினுடைய ஒரு தலையைப் பறித்ததினால்சிவனுக்குப்பிரம்மஹத்தி தோஷம் பிடித்து விட்டது. திருமாலின் பூரண அவதாரமாகிய இராம பிரானுடைய பாதம் பட்டுப் புனிதமான இந்த இடத்துக்குச் சிவன் வந்து அந்தப் பிரம்மஹத்தி தோஷத்தைப் போக்கிக் கொண்டார். இராமரை ஈசுவரன் பூஜித்த இடமானபடியால் இராமேசுவரம் என்ற பெயர் ஏற்பட்டது! தெரிந்து கொண்டீர்களா, மூடசிகாமணி பட்டர்களே!" என்று ஆழ்வார்க்கடியான் கர்ஜித்தான்.

"யாரடா அவன் எங்களை மூட சிகாமணிகள் என்பது? அடே தடியா! நீ என்ன தலையில் கொம்பு முளைத்தவனா?" என்று ஒரு பட்டர் சீறினார்.

"இல்லை, ஐயா, பட்டரே! என் தலையிலே கொம்பு முளைக்கவில்லை; கையிலேதான் இந்தக் கொம்பு இருக்கிறது! என்னை யார் என்று கேட்டீர் அல்லவா? சொல்லுகிறேன். திருக்குருகூரில் அவதரித்து வேதம் தமிழ் செய்த நம்மாழ்வாரின் அடியார்க்கு அடியான்!! மற்றவர்களை மண்டையில் நையப் புடைக்கும் கைத்தடியான்!" என்று தடியைத் தூக்கிக் காட்டினான்.

"ஆழ்வார்க் கடியார்க் கடியானே! நீ ஏன் உன் தலையில் முன்புறத்தில் குடுமி வைத்திருக்கிறாய்? அதையும் மழுங்கச் சிரைத்து விட்டாயானால், உன் மண்டையின் உள்ளும் புறமும் ஒன்றாயிருக்கும்!" என்றார் ஒரு சைவர்.

"பட்டர்களே! இந்தப் புண்ணிய க்ஷேத்திரத்திலே வந்து என் முன் குடுமியை எடுத்து விடுவதாகவே எண்ணி யிருந்தேன். அதற்குள் நீங்களே ஞாபகப் படுத்தினீர்கள்!..."

"அடே! நாவிதர் தெருவுக்குச் சென்று ஒரு நாவிதனை அழைத்து வாருங்களடா! கத்தியை நன்றாய்த் தீட்டிக் கொண்டு வரச் சொல்லுங்கள்! இவனுடைய சிகையை ஆணி வேரோடு களைந்தெறியச் சொல்லலாம்!" என்றார் ஒரு பட்டர்.

"இதற்கு நாவிதனைக் கூப்பிடுவானேன்? நாமே அந்தக் கைங்கர்யம் செய்து விடலாமே? நல்ல கூர்மையான கத்தியாகக் கொண்டு வாருங்கள்!" என்றார் இன்னொரு சைவர்.

"கொஞ்சம் பொறுங்கள்; இன்னும் ஒரு விஷயம் பாக்கியிருக்கிறது. ஒரு காலத்தில் என் தலை முழுதும் சிகை அடர்த்தியாக இருந்தது. ஒரு சைவனுடைய மண்டையை உடைத்துவிட்டு என் சிகையிலிருந்து ஒரு ரோமத்தை வாங்கி விடுவதென்று விரதம் எடுத்துக் கொண்டேன். அதன்படி முக்காலே அரைக்கால்வாசி சிகை தீர்ந்து விட்டது. இந்த ஊரில் என் முழு விரதத்தையும் நிறைவேற்றிக் கடலில் ஒரு முழுக்குப் போடப் போகிறேன். எங்கே, ஒவ்வொருவராக உங்களுடைய மண்டையைக் காட்டுங்கள், பார்க்கலாம்!" என்று ஆழ்வார்க்கடியான் கைத்தடியை ஓங்கினான்.

"அடேடே! இந்த வைஷ்ணவன் என்ன துடுக்காகப் பேசுகிறான்?" என்று சொன்னார் ஒருவர்.

"எங்கள் எல்லாருடைய மண்டையையும் உடைத்து விடுவாயா? உன்னால் முடியுமா?" என்று கூறினார் இன்னொருவர்.

"முடியாமலா முக்காலே அரைக்கால் பங்கு சிகையை எடுத்து விட்டிருக்கிறேன்?" என்று கூறி ஆழ்வார்க்கடியான் தடியை வேகமாகச் சுழற்றத் தொடங்கினான்.

"அடியுங்கள்! பிடியுங்கள்! கட்டுங்கள்! வெட்டுங்கள்!" என்று தலைக்குத் தலை கத்தினார்களே தவிர, அக் கூட்டத்தில் யாரும் ஆழ்வார்க்கடியானுக்கு அருகில் நெருங்கவில்லை.

அச் சமயம் வெகு சமீபத்தில் எழுந்த ஒரு கோஷம் அவர்கள் எல்லாருடைய கவனத்தையும் கவர்ந்தது.

"திரிபுவன சக்கரவர்த்தி சுந்தர சோழ பராந்தகரின் மகா மான்ய முதன் மந்திரி அநிருத்தப் பிரம்மாதிராஜர் வருகிறார்! பராக்! பராக்!"

எல்லாரும் திகைத்துப் போய்க் கோஷம் வந்த திசையை நோக்கினார்கள். ஆழ்வார்க்கடியான் எல்லாரிலும் அதிகமாகத் திகைத்துத் தனது கைத் தடியைக் கக்கத்தில் வைத்துக் கொண்டு பார்த்தான்.



அவர்கள் நின்று சண்டையிட்ட இடம் இராமேசுவரக் கோயில் மதிலின் ஓரமான ஒரு மூடுக்கு. அந்த மூடுக்குத் திரும்பியதும் எதிரே விரிந்து பரந்த கடல். அக்கடலின் காட்சியோ கண் கொள்ளாத அற்புதக் காட்சியாயிருந்தது. பெரிய பெரிய மரக்கலங்கள், நாவாய்கள், சிறிய கப்பல்கள், படகுகள், ஓடங்கள், வள்ளங்கள், வத்தைகள், கட்டுமரங்கள் ஆகியவை நெடுகிலும் வரிசை வரிசையாகக் கண்ணுக் கெட்டிய தூரம் காணப்பட்டன. பாய்மரங்களிலிருந்து படபடவென்று காற்றில் அடித்துக் கொண்டு பறந்த வெண்ணிறப் பாய்கள், கடலையும் வானத்தையும் தூரத்திலே திட்டுத் திட்டாகத் தோன்றிய பல தீவுகளையும் பெரும்பாலும் மறைத்துக் கொண்டிருந்தன.

மேலே சொன்னவாறு கட்டியங் கூறிக்கொண்டு காவல் வீரர்கள் முன்னும் பின்னும் தொடர, சோழ சாம்ராஜ்யத்தின் புகழ் பெற்ற முதன் மந்திரி அன்பில் அநிருத்தப் பிரமராஜர் ராஜ கம்பீரத்துடன் ஒரு படகில் வந்துகொண்டிருந்தார். கரையில், கோயில் மதிள் ஓரமாக நடந்துகொண்டிருந்த சச்சரவை அவர் கவனித்தார். கூட்டத்தின் நடுவில் கக்கத்தில் தடியுடன் பரம சாதுவைப் போல நின்ற ஆழ்வார்க்கடியானைக் கையினால் சமிக்ஞை செய்து அருகில் அழைத்தார். ஆழ்வார்க்கடியான் பயபக்தியுடன் கையைக் கட்டிக் கொண்டு கடற்கரையோரம் சென்று நின்றான்.

"திருமலை! இது என்ன தெருக் கூத்து?" என்றார் அநிருத்தர்.

"குருவே! எல்லாம் கபட நாடக சூத்திரதாரியான அந்தக் கண்ணனின் திருக்கூத்துத்தான்! என் கண்களில் காண்பதை நான் நம்புவதா, இல்லையா என்றே தெரியவில்லை. நான் காண்பது கனவா? அல்லது எல்லாம் வெறும் மாயையா?......"

"திருமலை! உன்னைப் பரம வைஷ்ணவன் என்று நினைத்தேன். எப்போது பிரபஞ்சத்தை மித்தை என்று சொல்லும் மாயாவாதியானாய்?"

"குருவே! பரம வைஷ்ணவ பரம்பரையில் அவதரித்த தாங்கள் சைவ சமயி ஆகும்போது நான் ஏன் மாயாவாதி ஆகக் கூடாது? என்னுடைய பெயரை மாற்றிக்கொண்டு ஸ்ரீ சங்கர பகவத் பாதாச்சாரியாரின் அடியார்க் கடியன் ஆகி விடுகிறேன்......"

"பொறு! பொறு! நான் சைவ சமயி ஆனதாக யார் சொன்னது?"

"தங்கள் திருமேனியில் உள்ள சின்னங்கள் சொல்கின்றன!"

"ஆகா! திருமலை! நீ இன்னும் முன்போலவே இருக்கிறாய்! புறச் சின்னங்களுக்கே முக்கியம் கொடுக்கிறாய்! நெற்றியில் இடுகிற சந்தனத்தைச் சாய்த்து இட்டால் என்ன? நிமிர்த்து இட்டால் என்ன?"

"குருவே! நான் ஒன்றும் அறியாதவன்; எது முக்கியம், எது அமுக்கியம் என்று தெரியாதவன். தாங்கள் தான் என்னைத் தெளிவித்து ஆட்கொள்ள வேண்டும்."

"எல்லாம் தெளிவிக்கிறேன். நான் தங்கும் இடத்துக்கு வந்து சேர்! அதோ கடலில் ஒரு சிறிய தீவு தெரிகிறது பார்த்தாயா? அங்கேயுள்ள மண்டபத்துக்கு வா!"

"குருவே! இதோ இந்தச் சண்டைக்காரச் சைவர்கள் என்னை வர விடவேண்டுமே?" என்று ஆழ்வார்க்கடியான் சொல்லிக் கையினால் அவர்களைச் சுட்டிக் காட்டினான்.

அதுவரை சும்மாயிருந்த வீர சைவர்கள் உடனே நெருங்கி வந்தார்கள்.

"பிரம்மாதி ராஜரே! இந்த வைஷ்ணவன் எங்கள் மண்டைகளை உடைத்து விடுவானாம்! இவனைத் தக்கபடி தண்டிக்க வேண்டும்!" என்று ஒருவர் ஆரம்பித்தார். மற்றவர்கள் தலைக்குத்தலை பேசலானார்கள்.

"இவனுக்குத் தண்டனை நான் கொடுக்கிறேன். நீங்கள் போகலாம்" என்றார் அநிருத்தர்.

இதனால் அவர்கள் திருப்தி அடையவில்லை. "நாங்களே இவனுக்குத் தண்டனை கொடுக்கக் கூடாதா? இவனுடைய முன் குடுமியைச் சிரைத்து, இவனுடைய ஊர்த்வ சின்னங்களையெல்லாம் அழித்து, இவனைக் கிணற்றில் போட்டு முழுக்காட்டி......" என்று அடுக்கினார் ஒருவர்.

"என்ன சொன்னீர்கள்?" என்று ஆழ்வார்க்கடியான் கண்களில் தீ எழத் திரும்பி நோக்கினான்.

அநிருத்தப் பிரம்மராஜர் அப்போது "பட்டர் மணிகளே! இவன் பெரிய

முரடன். இவனைத் தண்டிக்க உங்களால் ஆகாது. நான் பார்த்துக் கொள்கிறேன்'' என்றார்.

பிறகு தம்மைத் தொடர்ந்து வந்த படகில் இருந்த அகப் பரிவார வீரர்களைப் பார்த்து, "உங்களில் எட்டுப் பேர் இறங்கி இவனை நம் இடத்துக்குக் கொண்டு வாருங்கள்!'' என்றார்.

அவ்வளவுதான். மறுகணம் வீரர்கள் எட்டுப் பேர் கரையில் குதித்தார்கள்; ஆழ்வார்க்கடியானைச் சூழ்ந்து கொண்டு நின்றார்கள்.

படகு மேலே சென்றது.

படை வீரர்கள் புடை சூழ ஆழ்வார்க்கடியானும் போனான்.

பட்டர்களும் மற்றவர்களும் அந்த வைஷ்ணவனுடைய முரட்டுத்தனத்தைக் குறித்துப் பலவாறு பேசிக் கொண்டு கலைந்து போனார்கள்.

## அத்தியாயம் 11

# தெரிஞ்ச கைக்கோளப் படை

இராமேசுவரப் பெருந் தீவை யடுத்த சிறிய தீவுகளில் ஒன்றில், ஒரு பழமையான மண்டபத்தில், அநிருத்தப் பிரம்மாதி ராயர் கொலு வீற்றிருந்தார். அவருடைய அமைச்சர் வேலையை நடத்துவதற்குரிய சாதனங்கள் அவரைச் சூழ்ந்திருந்தன. கணக்கர்கள், ஓலை எழுதும் திருமந்திர நாயகர்கள், அகப்பரிவாரக் காவலர்கள் முதலியோர் அவரவர்களுடைய இடத்தில் ஆயத்தமாக இருந்தார்கள்.

அநிருத்தர் படகிலிருந்து இறங்கி வந்து அம் மண்டபத்தில் அமர்ந்து சிறிது நேரம் ஆனதும், தம்மைப் பார்க்க வந்திருந்தவர்களை அழைக்குமாறு கட்டளை யிட்டார்.

ஐந்து பேர் முதலில் வந்தார்கள். அவர்களைப் பார்த்தால் செல்வச் செழிப்புள்ள வர்த்தகர்கள் என்று தோன்றியது.

ஒரு தட்டில் நவரத்தின மாலை ஒன்றை வைத்துச் சமர்ப்பித்தார்கள். அதை அநிருத்தப் பிரம்மராயர் வாங்கிக் கணக்கரிடம் கொடுத்து, "செம்பியன் மகாதேவியின் ஆலயத் திருப்பணிக்கு என்று எழுதி வைத்துக் கொள்க!'' என்றார்.

பிறகு, வந்தவர்களைப் பார்த்து "நீங்கள் யார்?'' என்று கேட்டார்.

"நானா தேச திசையாயிரத்து ஐந்நூற்றுவர் * சார்பில் நாங்கள் வந்திருக்கிறோம்'' என்று அவர்களில் ஒருவர் கூறினர்.

"சந்தோஷம்; பாண்டிய நாட்டில் உங்களுடைய வாணிபம் செழிப்பாயிருக்கிறதல்லவா?''

"நாளுக்கு நாள் செழிப்படைந்து வருகிறது!''

"பாண்டிய நாட்டு மக்கள் என்ன பேசிக் கொள்கிறார்கள்?''

"பாண்டிய வம்ச ஆட்சியைக் காட்டிலும் சோழ குல ஆட்சியே மேலானது என்று பேசிக் கொள்கிறார்கள். முக்கியமாக, இளவரசர் அருள்மொழிவர்மரின் வீர தயாளங்களைக் குறித்துச் சிலாகிக்கிறார்கள். இலங்கையில் நடப்பதெல்லாம் இந்தப் பக்கத்து மக்களிடையில் பரவி யிருக்கிறது...''

"கீழ்க்கடல் நாடுகளுடன் உங்கள் கப்பல் வாணிபம் இப்போது எப்படியிருக்கிறது?''

"சுந்தர சோழ சக்கரவர்த்தியின் ஆளுகையில் ஒரு குறைவும் இல்லை. சென்ற ஆண்டில் அனுப்பிய எங்கள் கப்பல்கள் எல்லாம் திரும்பி வந்து விட்டன. ஒன்று கூடச் சேதமில்லை.''

"கடல் கொள்ளைக்காரர்களினால் தொல்லை ஒன்றுமில்லையே?''

"சென்ற ஆண்டில் இல்லை. மானக்கவாரத் தீவுக்கு அருகில் இருந்த கடற் கொள்ளைக்காரர்களை நம் சோழக் கப்பற் படை அழித்த பிறகு கீழைக் கடல்களில் கொள்ளை பயம் கிடையாது.''

"நல்லது; நாம் கொடுத்தனுப்பிய ஓலை சம்பந்தமாக என்ன ஏற்பாடு செய்திருக்கிறீர்கள்?''

"கட்டளைப்படி செய்திருக்கிறோம். இலங்கைச் சைன்யத்துக்கு அனுப்ப ஆயிரம் மூட்டை அரிசியும், ஐந்நூறு

* இந்த நீண்ட தொடர் பெயர் கொண்ட வர்த்தகக் கூட்டத்தார் சோழப் பேரரசின் கீழ், கடல் கடந்த நாடுகளுடன் வாணிபம் நடத்தி வந்தார்கள்.

மூட்டை சோளமும், நூறு மூட்டை துவரம் பருப்பும் இந்த இராமேசுவரத் தீவில் கொண்டு வைத்திருக்கிறோம். இலங்கைக்கு அனுப்பி வைக்க ஏற்பாடு செய்ய வேணும்."

"உங்களுடைய கப்பல்களிலேயே ஏற்றி அனுப்ப முடியுமா?"

"கட்டளை யிட்டால் செய்கிறோம். இலங்கை யுத்தம் எப்போது முடியும் என்று தெரிந்து கொள்ள விரும்புகிறோம்."

"ஆ! அது யாருக்குத் தெரியும்? உங்களுடைய வர்த்தக சபைக்கு ஜோதிடக்காரன்



இருக்கிறான் அல்லவா? அவனைக் கேட்டு எனக்கும் சொல்லுங்கள்!"

"பிரம்ம ராஜரே! எங்கள் ஜோதிடக்காரன் சொல்வதையெல்லாம் எங்களாலேயே நம்ப முடியவில்லை."

"அப்படி அவன் என்ன சொல்லுகிறான்?"

"இளவரசர் அருள்மொழி வர்மர் போகுமிடமெல்லாம் வெற்றிதான் என்று சொல்லுகிறான். அவருடைய ஆட்சியில் சோழக் கப்பல் படை கடல் கடந்த தேசங்களுக்கெல்லாம் சென்று வெற்றி கொள்ளும் என்று சொல்லுகிறான். தூர



தூரத்தில் உள்ள தேசங்கள் பலவற்றில் புலிக்கொடி பறக்கும் என்று சொல்லுகிறான்."

"அப்படியானால் உங்கள் பாடு கொண்டாட்டம்தான்!"

"ஆம்; எங்கள் கடல் வர்த்தகம் மேலும் செழித்து ஓங்கும் என்றும் சொல்லி யிருக்கிறான்."

"மிகவும் சந்தோஷம். ஸ்ரீ ரங்கநாதருடைய அருள் இருந்தால் அப்படியே நடக்கும். இலங்கையில் யுத்தம் நடக்கும் வரையில் மாதம் ஒரு தடவை நீங்கள் இப்படியே அரிசி முதலியவை அனுப்பி வர வேண்டும். போய் வாருங்கள்."

"அப்படியே செய்கிறோம், போய் வருகிறோம்."

ஐந்நூற்றுவர் சபையின் பிரதிநிதிகள் போன பிறகு, ஒரு காவலன் வந்து "தெரிஞ்ச கைக் கோளப் படைச் சேனாதிபதிகள் காத்திருக்கிறார்கள். பார்க்க விரும்புகிறார்கள்" என்று சொன்னான்.

"வரச் சொல்லு!" என்றார் முதல் அமைச்சர் அநிருத்தர்.

மூன்று கம்பீர புருஷர்கள் பிரவேசித்தார்கள். அவர்களுடைய முகங்களிலும் தோற்றத்திலும் வீர லக்ஷ்மி வாசம் செய்தாள். அஞ்சா நெஞ்சம் படைத்த ஆண்மையாளர் என்று பார்த்தவுடனே தெரிந்தது.

"சுந்தர சோழ தெரிஞ்ச கைக்கோளப் படையார் * தானே?" என்று அநிருத்தர் கேட்டார்.

"ஆம், ஐயா! ஆனால் அப்படிச் சொல்லிக் கொள்ளவும் எங்களுக்கு வெட்கமா யிருக்கிறது."

"அது ஏன்?"

"சக்கரவர்த்தியின் சோற்றைத் தின்று கொண்டு ஆறு மாத காலமாக இங்கே வீணில் காலங் கழித்துக் கொண்டிருக்கிறோம்."

"உங்கள் படையில் எத்தனை கை? எத்தனை வீரர்கள்?"

"எங்கள் சேனை மூன்று கைமா சேனை. இவர் இடங்கை சேனைத் தலைவர்; இவர் வலங்கை சேனைத் தலைவர்; நான் நடு விற்கைப் படைத் தலைவன். ஒவ்வொரு கையிலும் இரண்டாயிரம் வீரர்கள். எல்லோரும் சாப்பிட்டுத் தூங்கிக் கொண்டிருக்கிறோம். வேலும் ஈட்டியும் வாளும் தோளும் சோம்பிக் கிடக்கின்றன. போர்த் தொழிலே எங்களுக்கு மறந்து விடும்போலிருக்கிறது."

"உங்களுடைய கோரிக்கை என்ன?"

"எங்களை இலங்கைக்கு அனுப்பி வைக்கக் கோருகிறோம். இளவரசர் அருள்மொழி வர்மர் மாதண்ட நாயகராயிருக்கும் சைன்யத்திலே சேர்ந்து யுத்தம் செய்ய விரும்புகிறோம்."

"ஆகட்டும்; தஞ்சைக்குப் போனதும் சக்கரவர்த்தியின் சம்மதம் கேட்டு விட்டு உங்களுக்கு அறிவிக்கிறேன்."

"பிரம்மராஜரே! அதற்குள்ளே இலங்கை யுத்தம் முடிந்து விட்டால்?"

"அந்தப் பயம் உங்களுக்கு வேண்டாம். இலங்கை யுத்தம் இப்போதைக்கு முடியும் என்பதாகத் தோன்றவில்லை."

"ஈழத்துச் சேனா வீரர்கள் அவ்வளவு பொல்லாதவர்களா? எங்களை அங்கே அனுப்பி வையுங்கள். ஒரு கை பார்க்கிறோம்!......"

"ஒரு கை என்ன? நீங்கள் மூன்று கையும் பார்ப்பீர்கள். தெரிஞ்ச கைக்கோளரின் மூன்றுகை மாசேனை யுத்த களத்தில் புகுந்து விட்டால் பகைவர்களின் பாடு என்னவென்று சொல்ல வேண்டுமோ? நடுவிற்கை வீரர்கள் பகைவர் படையின் நடுவில் புகுந்து தாக்குவீர்கள். அதே சமயத்தில் இடங்கை வீரர்கள் இடப்புறத்திலும் வலங்கை வீரர்கள் வலப்புறத்திலும் சென்று இடி விழுவது போலப் பகைவர்கள் மீது விழுந்து தாக்குவீர்கள்..."

"அப்படித் தாக்கித்தான் பாண்டிய சைன்யத்தை நிர்மூலம் செய்தோம்; சேரர்களை முறியடித்தோம்."

"பாண்டியர்களும் சேரர்களும் போர்க்களத்தில் எதிர்த்து நின்றார்கள்; அதனால் அவர்கள் தாக்கி முறியடித்தீர்கள். பகை வீரர்களை முதலில் கண்ணால் பார்த்தால் தானே அவர்களை நீங்கள் ஒரு கையும் பார்க்கலாம், மூன்று கையும் பார்க்கலாம்?"

---

★ இன்று தமிழ்நாட்டில் கைத்தறி நெசவுத்தொழிலில் ஈடுபட்டு நூலின்றித் திண்டாடும் கைக்கோள வகுப்பார் சோழப் பேரரசின் காலத்தில் புகழ்பெற்ற வீர வகுப்பாரா யிருந்தனர். அவர்களில் பொறுக்கி எடுத்த வீரர்களைக்கொண்டு சோழ சக்கரவர்த்திகள் 'அகப் பரிவாரப் படை'யை அமைத்துக் கொள்வது வழக்கம். அப்படிப் பொறுக்கி எடுக்கப்பட்ட படைக்குத் 'தெரிஞ்ச கைக் கோளர் படை' என்ற பெயர் வழங்கியது. அந்தந்தச் சக்கரவர்த்தி அல்லது அரசரின் பெயரையும் படைப் பெயருக்கு முன்னால் சேர்த்துக் கொள்வதுண்டு.

"இராவணர் காலத்து அசுரர்களைப் போல் இந்தக் காலத்து இலங்கை வீரர்களும் மாயாவிகளாகி விட்டார்களா? மேக மண்டலத்தில் மறைந்து நின்று போரிடுகிறார்களா?"

"மாயாவிகளாய் மறைந்துதான் விட்டார்கள்; ஆனால் போர் செய்யவில்லை. போரிட்டால்தான் இருக்குமிடத்தைக் கண்டு பிடித்து விடலாமே? இலங்கை அரசன் மகிந்தனையும் காணவில்லை; அவனுடைய சேனா வீரர்களையும் காணவில்லை. காடுகளிலே, மலைகளிலே எங்கே போய் ஒளிந்து கொண்டார்களோ, தெரியவில்லை. ஆகையால் ஆறுமாதமாக இலங்கையில் யுத்தமே நடைபெறவில்லை. உங்களையும் அங்கே அனுப்பி என்ன செய்கிறது?"

"மகா மந்திரி! எங்களை அனுப்பிப் பாருங்கள்! மகிந்தனும் அவனுடைய வீரர்களும் காடு மலைகளிலே ஒளிந்திருக்கட்டும்; அல்லது மேக மண்டலத்திலே ஒளிந்திருக்கட்டும். அவர்களைக் கைப்பிடியாகப் பிடித்துக் கொண்டு வந்து இளவரசரின் காலடியில் சேர்க்கிறோம். அப்படிச் சேர்க்காவிட்டால், 'தெரிஞ்ச கைக் கோளர் படை' என்ற பெயரை மாற்றிக் கொண்டு, 'வேளாளரின் அடிமைப் படை' என்ற பட்டயத்தைப் பெற்றுக் கொள்கிறோம்!"

"வேண்டாம்; வேண்டாம்! அப்படி ஒன்றும் இப்போது சபதம் செய்ய வேண்டாம்! தெரிஞ்ச கைக் கோளர் படையின் வீர பராக்கிரமம் இந்த ஜம்புத்வீபத்தில் யாருக்குத் தெரியாது? தஞ்சாவூர் சென்றதும் சக்கரவர்த்தியைக் கேட்டுக் கொண்டு உங்களுக்குக் கட்டளை அனுப்புகிறேன். அதுவரை பொறுமையாக இருங்கள். பாண்டிய நாட்டில் பகைவர்களை அடக்கி அமைதியை நிலை நாட்டி வாருங்கள்!"

"மகாமந்திரி! பாண்டிய நாட்டில் இனி அடக்குவதற்குப் பகைவர் யாரும் இல்லை. குடி மக்கள் யுத்தம் நின்றது பற்றி மகிழ்ச்சி அடைந்திருக்கிறார்கள். அவரவர்களும் விவசாயம், வாணிபம், கைத் தொழில்களில் ஈடுபட்டு அமைதியான வாழ்க்கை நடத்துகிறார்கள். பாண்டிய மன்னர் குலமோ நாசமாகி விட்டது......"

"அவ்விதம் எண்ண வேண்டாம்! வீர பாண்டியனோடு பாண்டிய வம்சம் அற்று விட்டதாக நினைக்கிறீர்கள். அது தவறு. பாண்டிய சிம்மாசனத்துக்கு உரிமை கோருவோர் இன்னும் இருக்கிறார்கள். அவர்களுக்காகச் சதி செய்வோரும் இருக்கிறார்கள்......!"

"ஆகா! எங்கே அந்தச் சதிகாரர்? தெரியப்படுத்துங்கள்!"

"காலம் வரும்போது உங்களுக்கே தெரியும். பாண்டிய குலத்தின் பழைமையான மணிக் கிரீடமும் இந்திரன் அளித்த இரத்தின மாலையும் வைர மிழைத்த பட்டத்து உடைவாளும் இன்னும் இலங்கையில் இருந்து வருகின்றன. ரோஹண மலை நாட்டில் எங்கேயோ ஒளித்து வைக்கப்பட்டிருக்கின்றன. அவற்றை மீட்டுக் கொண்டு வரும் வரையில் பாண்டியப் போர் முற்றுப் பெறாது."

"ஆபரணங்களை மீட்டுக் கொண்டு வர வேண்டும்; இளவரசர் அருள்மொழிவர்மரை மதுரைச் சிம்மாசனத்தில் அமர்த்திப் பாண்டிய மணி மகுடத்தையும் பட்டாக் கத்தியையும் அணிவிக்கும் நாளும் வர வேண்டும்!"

"ஆகா! இது என்ன வார்த்தை சொல்கிறீர்கள்?"

"குடிமக்களின் நாவிலும் போர் வீரர்களின் உள்ளத்திலும் இருப்பதைச் சொல்கிறோம்."

"அதெல்லாம் பெரிய இராஜரீக விஷயங்கள். நாம் பேச வேண்டாம். உங்களுக்குச் சந்தோஷம் அளிக்கக் கூடிய வேறு ஒரு முக்கிய விஷயம் சொல்லப் போகிறேன்......"

"கவனமாய்க் கேட்டுக் கொள்கிறோம், மகா மந்திரி!"

"இலங்கை யுத்தத்தோடு யுத்தம் முடிந்துவிடும் என்று நினைக்க வேண்டும். இளவரசர் அருள்மொழிவர்மர் இலங்கைப் போர் முடிந்த பிறகு நாலா திசைகளிலும் திக்விஜயம் செய்யப் புறப்படுவார். ஆயிரம் கப்பல்களில் வீரர்களை ஏற்றிக்கொண்டு கீழ்த் திசைக் கடல்களிலே செல்வார். மாநக்கவாரம், மாப்பாளம், மாயிருடிங்கம், கடாரம், இலாமுரி தேசம், ஸ்ரீவிசயம், சாவகம், புட்பகம் ஆகிய நாடுகளை அந்த மகா வீரர் வெற்றி கொள்வார். தெற்கே முன்னீர்ப் பழந்தீவு பன்னீராயிரமும் கைப்பற்றுவார். மேற்கே கேரளம், குடமலை, கொல்லம் ஆகிய நாடுகள் அவருடைய காலடியில் வந்து பணியும். பிறகு வட திசை நோக்கிப் புறப்படுவார். வேங்கி, கலிங்கம், இரட்டபாடி, சக்கரக்கோட்டம்,

அங்கம், வங்கம், கோசலம், விதேகம், கூர்ஜரம், பாஞ்சாலம் என்னும் நாடுகளுக்குப் படையெடுத்துச் செல்வார். காவியப் புகழ்பெற்ற கரிகால் வளவனைப் போல் இமய மலைக்கும் சென்று புலிக் கொடியை நாட்டுவார். வீர சேனாதிபதிகளே! இப்படியெல்லாம் நமது தென் திசை மாதண்டநாயகர் திட்டம் இட்டிருக்கிறார். தமிழகத்தில் வீர ரத்தமும் வயிர நெஞ்சமும் படைத்த அனைவருக்கும் வேண்டிய வேலை இருக்கும்; தத்தம் வீர பராக்கிரமங்களை நிலை நாட்டச் சந்தர்ப்பம் கிடைக்கும். ஆகையால் நீங்களும் உங்கள் தெரிஞ்ச கைக்கோளப் படையும் பொறுமை இழக்க வேண்டாம்!"

சேனாதிபதிகள் மூவரும் ஏக காலத்தில் "சுந்தர சோழ சக்கரவர்த்தி வாழ்க! இளவரசர் அருள்மொழி வர்மர் வாழ்க! மகா மந்திரி அநிருத்தர் வாழ்க!" என்று கோஷித்தார்கள்.

பிறகு அவர்களில் ஒரு படைத் தலைவன் கூறினான்:—"மகா மந்திரி! இன்னும் ஒரே ஒரு விண்ணப்பம் செய்து கொள்ள விரும்புகிறோம். எங்கள் படையின் பெயர் 'சுந்தர சோழ தெரிஞ்ச கைக்கோளப் படை' என்பது தாங்கள் அறிந்ததே."

"தெரிந்த விஷயந்தான்."

"சுந்தர சோழ சக்கரவர்த்தியின் திருப்பணியில் உயிரையும் விடுவோம் என்று பகைவர்களின் இரத்தம் தோய்ந்த சிவந்த கையினால் அடித்துப் பிரமாணம் செய்து கொடுத்தவர்கள்."

"அதுவும் நான் அறிந்ததே."

"ஆகையால் சக்கரவர்த்தியைத் தவிர வேறு யாரையும் நாங்கள் சேர மாட்டோம்; வேறு யார் சொல்வதையும் கேட்க மாட்டோம்."

"உங்களிடம் நான் எதிர்பார்த்ததும் இதுவே தான்!"

"முன்னொரு காலத்தில் பழுவேட்டரையர்களின் மாபெரும் சேனையில் ஒரு பகுதியாக இருந்தோம். அது காரணம் பற்றி எங்கள் பேரில் யாருக்கும் யாதொரு சந்தேகமும் ஏற்படக் கூடாது......"

"ஆகா! இது என்ன வார்த்தை? யாருக்கு என்ன சந்தேகம்!"

"தஞ்சாவூரில் நடப்பது பற்றி ஏதேதோ வதந்திகள் காற்றிலே வருகின்றன."

"காற்றிலே வருகிறது காற்றோடு போகட்டும்! நீங்கள் அதையெல்லாம் நம்பவும் வேண்டாம்; திருப்பிச் சொல்லவும் வேண்டாம்."

"கொடும்பாளூர் வேளாளர்கள் ஏதாவது எங்களைப் பற்றிச் சந்தேகத்தைக் கிளப்பக் கூடும்..."

"கிளப்ப மாட்டார்கள்; கிளப்பினாலும் யாரும் கேட்க மாட்டார்கள்."

"மனித காயம் அநித்தியமானது..."

"அதனால் சுத்த வீரர்கள் உயிருக்குப் பயப்பட மாட்டார்கள்."

"திரிபுவன சக்கரவர்த்தியானாலும் ஒரு நாள்..."

"இறைவன் திருப்பாதங்களை அடைய வேண்டியதுதான்."

"சக்கரவர்த்திக்கோ உடல்நிலை சரியாக இல்லை..."

"வானத்தில் வால் நட்சத்திரம் பிரகாசிக்கிறது!"

"சக்கரவர்த்திக்கு அப்படி ஏதாவது நேர்ந்து விட்டால், எங்கள் படை வீரர்கள் அருள்மொழி வர்மரின் அகப் பரிவாரமாக விரும்புகிறார்கள்!"

"சக்கரவர்த்தியின் ஆக்ஞையின்படி நடப்பது உங்கள் கடமை!"

"சக்கரவர்த்தியின் ஆக்ஞையை எங்களுக்குத் தெரிவிப்பது தங்களுடைய கடமை. தாங்கள் அந்தப் பொறுப்பை ஏற்றுக் கொள்ளுங்கள். அல்லது தஞ்சைக்குப் போய்ச் சக்கரவர்த்தியைத் தரிசிக்க எங்களுக்கு அநுமதி கொடுங்கள்......!"

"வேண்டாம்; நீங்கள் தஞ்சை போவது உசிதமல்ல; வீண் குழப்பம் ஏற்படும். சக்கரவர்த்தியைக் கண்டு உங்கள் விருப்பத்தைத் தெரியப்படுத்துவதை நானே ஏற்றுக் கொள்கிறேன். நீங்கள் நிம்மதியாக இருங்கள்!"

"தங்களிடம் தெரியப்படுத்தியதுமே எங்களுடைய மனதிலிருந்த பாரம் நீங்கி விட்டது! போய் வருகிறோம்!"

தெரிஞ்ச கைக்கோளப் படைத் தலைவர்கள் மூவரும் அங்கிருந்து அகன்று சென்றார்கள்.

அநிருத்தப் பிரமராயர் "ஆகா! பொன்னியின் செல்வரிடம் அப்படி என்னதான் ஆகர்ஷண சக்தி இருக்குமோ, தெரியவில்லை! அவரை ஒரு முறை பார்த்தவர்கள் கூடப் பைத்தியமாகி விடுகிறார்களே!" என்று வாய்க்குள் முணுமுணுத்துக் கொண்டார்.

பிறகு, உரத்த குரலில், "எங்கே? அந்த முரட்டு வைஷ்ணவனை இங்கே வரச் சொல்லுங்கள்!" என்று கட்டளையிட்டார். (தொடரும்)




மணத்தில் சிறந்தது
•
ரகத்தில் உயர்ந்தது
•
தினுசுகள் நிறைந்தது
•
புதுமையில் நிகரற்றது

அதிகமான ஜனங்கள்
சிறந்த பிஸ்கோத்து
பிரிட்டானியா
வை வாங்குவதில்
ஆச்சரியமில்லை

FBMI

# ஆரோக்கிய ரகசியம்

வி. என். குமாரசாமி

## 38. பெற்றோர்களே ஜாக்கிரதை !

"பிறந்த குழந்தையை ஆறு மாதம்வரை பேயும் வளர்க்கும்" என்று பெரியவர்கள் சொல்லுவார்கள். அப்படி யென்றால் இயற்கை ஆரோக்கியத்துடன் பிறக்கும் குழந்தைக்கு ஆறு மாதம் வரை எந்தவித நோயும் வராது என்பது பொருள். முன்பெல்லாம் வீட்டில் பெரியவர்கள் சின்னவர்கள் என்ற மரியாதை இருந்தது. வீட்டில் கட்டு திட்டங்கள் இருந்தன. விரதங்கள், நோன்புகள் முதலியவைகளை பக்தி சிரத்தையுடன் அனுஷ்டிப்பார்கள். எதிலும் மிதமாய் இருப்பார்கள். இப்பொழுதோ காலையில் கலியாணம்; மாலையில் ஆகாய விமானத்தில் பறக்கும் யாத்திரை! உடனே தனிக்குடித்தனம். வாழ்க்கையில் கட்டுப்பாடு கிடையாது. மனம்போன போக்கு. ஆரோக்கியம் சீர்கேடடைகிறது. அந்த நிலைமையில் அவர்களுக்கு ஜனிக்கும் குழந்தைகள் மட்டும் எப்படி பலமாய், ஆரோக்கியமாய் இருக்கும்? தந்தையோ தொண்ணூறு ராத்தல் எடை. தாயோ எழுபது ராத்தல். அவர்களுக்குப் பிறக்கும் குழந்தைகளோ மூன்று அல்லது நான்கு ராத்தல். பிறந்தபோதிலிருந்து குழந்தைக்கு மருந்துகள்! ஊசிகள்! குழந்தை மருந்துகளினாலேயே வளர்கிறது. மருந்துகளினாலேயே வாழ்கிறது. கடைசியில் மருந்துகளினாலேயே செத்து மடிகிறது. எல்லாம் மருந்து மயம்!

காளைப் பருவத்தில் கட்டுக் கடங்காமல் திரிந்த வாலிபர்கள், பிறகு கலியாணம் செய்துகொண்டால், அவர்களுக்குப் பிறக்கும் குழந்தைகள் அவர்களின் செய்கைகளுக்கு அத்தாட்சியாகக் காட்சி அளிக்கிறது. பிறருக்குத் தெரியாமல் பல கொடூரச் செயல்களில் ஈடுபட்டிருக்கலாம். ஆனால் அவர்களின் குழந்தைகள் அக் குற்றங்களை உலகத்திற்குப் பறை சாற்றி விடுகின்றன. மேகங்களில் பல தினுசு. மழை பெய்யும் மேகமல்ல. அதனால் உலகத்துக்கு க்ஷேமமுண்டு. உடல் ஆரோக்கியத்தை இருட்டடிப்பதினால் இதற்கும் மேகம் என்று பெயர் வந்தது போலும்! வெட்டை நோய், கரப்பான் முதலியவைகளை குழந்தைகளுக்கு ஆஸ்தியாக வைக்கிறார்கள். அதுவுமில்லாமல் பரம்பரைச் சொத்து வேறு இருக்கின்றன. க்ஷயம், காசம், குஷ்டம், கரப்பான், மேகம் இன்னும் பல. இது தவிர அநேக குழந்தைகள் அங்கஹீனமாகப் பிறக்கின்றன. குருடு, செவிடு, ஊமை முதலியன.

அழகான குழந்தைகள், ஆரோக்கியமான குழவிகள், குண்டு குழந்தைகள் பிறப்பதெல்லாம் பெற்றோர்களாக வேண்டியவர்களின் கையில் இருக்கிறது. குழந்தையைத் தெய்வமாக வழிபடும் நாடல்லவா நமது நாடு!

ஒரு ஏழை விதவை தன் பன்னிரண்டு வயதுச் சிறுவனை அழைத்து வந்தாள். என் மனைவியிடம் தன் குறைகளைச் சொன்னாள். "என் புருஷன், பையன் சிறு குழந்தையாக இருக்கும்போதே இறந்து விட்டார். அவர் இருக்கும்போது துர் நடத்தையினால் தன் உடலையும் கெடுத்துக் கொண்டார். என் உடலும் கெட்டது. ஆனால் இந்தக் குழந்தையை எப்படியோ வளர்த்தேன். இப்பொழுது சில வருஷங்களாக இவனுக்கு இந்திரியம் தானாகவே வெளிவந்து விடுகிறது. உட்கார்ந்தாலும் அவன் கால் கிஜார் நனைந்து விடும். சிறு நீர் வரும் வழியில் எப்பொழுதும் இந்திரியம் கசிந்து கொண்டேயிருக்கிறது. இங்கிலீஷ் வைத்தியம், இந்திய வைத்தியம் எல்லாம் பார்த்தாயிற்று. பலனில்லை. யோகாசனத்தினால் பலன் உண்டாகலாமென்று நம்பி வந்தேன்!" என்றாள்.

"இச் சிறுவனுக்குத் துர் சகவாசம் உண்டா?" என்று கேட்டோம். அதெல்லாம் இல்லை என்று சொன்னாள். அப்படி இருந்தாலும் எப்படிக் கண்டு பிடிப்பது? இந்திரியம் உற்பத்தியாகித் தன் சக்தியைச் சேகரித்துக் கொள்ளும் இந்தப் பருவத்தில், அது உடலுடன் சேராமல் வெளி வந்து விடுகிறது என்றால் அது பையனின் செயலா? பெற்றோர்களின் செயலா?

இச் சிறுவனுக்குச் சர்வாங்காசனம் மட்டும் பயிற்சி அளிக்கப்பட்டது. தினம் ஐந்து நிமிஷம் முதல் பத்து நிமிஷங்கள் செய்தான். நாற்பது நாள் இம்மாதிரி செய்த பின் மறுபடி அவர்கள் வந்தார்கள். 'பாதி குணமாக இருக்கிறது' என்றார்கள். பிறகு புஜங்காசனம், சலபாசனம், தனுராசனம், பாதஹஸ்தாசனம், ஹலாசனம் முதலியவை

களைச் சொல்லித் தந்து சர்வாங்காசனமும் பத்து நிமிஷம் செய்யச் சொன்னேன். ஒரு மாதத்தில் அந்தக் குறை அறவே நீங்கிவிட்டதாக வந்து அறிவித்தார்கள்.

பிறகு தாயும் அந்த ஆசனங்களைப் பழகித் தனக்குள்ள குறைகளை நீக்கிக் கொண்டாள்.

வாலிபன் செய்யும் வினை, அவனோடு மட்டும் போவதில்லை. மனைவிக்கும் அதைப் பரிமாறுகிறான். எத்தனைப் பெண்கள் தங்கள் துன்பகரமான வாழ்க்கையை என் மனைவிக்குக் கடிதம் மூலம் வரைகின்றனர்; நேரிலும் வந்து சொல்லுகின்றனர். ஆனால் எல்லோருக்கும் முதலில் சர்வாங்காசனம். பிறகு மற்ற ஆசனங்களுமே விமோசனம் அளிக்கும். வெட்டை நோய்க்கும், மற்றும் இதன் சம்பந்தப்பட்ட நோய்களுக்கெல்லாம் மருந்து சர்வாங்காசனப் பயிற்சியும், உணவுப் பத்தியமும்தான்.

வாலிப உலகத்தார் வரையும் கடிதங்கள் பயங்கரமானவை. சரியான வாலிபப் பருவத்தை அடைந்தவர்கள் துன்மார்க்கத்தில் சென்று கெடுகின்றனர் என்றால் அது சவகாச தோஷம் எனலாம். பத்து, பன்னிரண்டு வயது முதல் தன்னைத் தானே கெடுத்து, பிறகு பெரியவர்களாகி எதற்கும் லாயக்கில்லாமல் போனவர்கள் தங்கள் செய்கைகளை வரைகின்றனர். என்ன சமூகம்! என்ன மக்கள்! என்ன வாழ்க்கை முறை! எந்தப் பெற்றோர்கள் தன் குழந்தைகளுக்கு இதைப் பற்றி எடுத்துச் சொல்லப் போகின்றனர்! எந்தப் பள்ளிக்கூடத்தில், இதன் நன்மை தீமைகளைப் பற்றிப் போதிக்கப் படுகின்றன? பையன் வாலிபனான பின் கலியாணம் வேண்டாம் என்கிறான். பெற்றோர்களிடம் இதன் ரகசியம் எடுத்துச் சொல்ல முடியுமா? சிலர் எப்படியோ கலியாணமும் செய்து வைத்து விடுகின்றனர்.

இவர்களே இக்கதி யென்றால், தப்பித் தவறி இவர்களுக்குப் பிறக்கும் குழந்தை எப்படி இருக்கும்? நோய்களுக்கு இருப்பிடமாகவும், எலிக்குஞ்சுகளாகவும், எலும்புந் தோலுமாய்க் காட்சி அளிப்பதில் ஆச்சரியமென்ன? இக்குழந்தை பெரியவனாகிச் சாதிக்கிற காரியந்தான் என்னவோ? இரண்டு தலைமுறைக்கு முன்பிருந்த உடல் உறுதி, ஆரோக்கியம் இந்தத் தலைமுறைக்கும் காணோம். இனி வருவது அதைவிட மிக மோசமாய் இருக்கும்.

சர்வாங்காசனப் பயிற்சியைத் தவிர இதற்கு வேறு ஒரு மார்க்கமும் இல்லை. (தொடரும்)

# எத்தனை நிலம் வேண்டும்?

பதினைந்து வருடங்களுக்கு முன் ஒரு விவசாயிக்குத் தேவையானவை உண்ண உணவு, உடுக்க உடை, இருக்க இடம் இவையே. தனக்குச் சாப்பாட்டுக்குப் போக மீதியை என்ன விலைக்கானாலும் விற்றுக் கையில் கொஞ்சம் ரொக்கப் பணம் வைத்துக் கொள்வதோடு சரி. எப்போதாவது நகரத்துக்கு வந்து தேர், திருவிழா பார்த்துவிட்டு நகரத்தாரிடமிருந்து ''பட்டிக் காட்டான்'' என்ற பட்டத்தையும் பெற்றுக்கொண்டு செல்வான். இதற்கு மேல் அவன் எதையும் விரும்பியதில்லை. அவனுடைய கருத்தெல்லாம் நிலத்தில்தான். மழையென்றும் கோடை வெய்யிலென்றும் பாராமல் உழைத்து விளைச்சல் காண்பதே அவனுடைய லட்சியமாயிருந்தது. ஆனால் இப்பொழுதோ, காலம் மாறிவிட்டது. காட்டுக்குக் கஞ்சி கொண்டு போகும் காலம் மலையேறி, காப்பி கொண்டு போகும் காலமாகி விட்டது.

இப்பொழுது வேலை நாட்களைத் தவிர மற்ற நாட்களில் கிராமவாசிகளை அதிகமாக நகர்ப்புறங்களில்தான் காணலாம். நிலம் அதிகம் வைத்திருப்பவர்கள் அவற்றைக் குத்தகைக்கு விட்டு விட்டு நகரங்களிலேயே வசிக்க ஆரம்பித்து விட்டனர். இவற்றிற்கெல்லாம் காரணம் என்ன! நகரங்களில் நாகரிக வசதிகள் அதிகமாயிருப்பதனாலேதான்.

படித்தவர்கள் எல்லோரும் கிராம வாழ்க்கையை மேற்கொண்டு விவசாயத்தில் ஈடுபட வேண்டுமென்று தலைவர்கள் கூறுகின்றனர். படித்தவர்கள் விரும்பியோ அல்லது சூழ்நிலை காரணமாகவோ இப்பொழுது விவசாயத்தை ஏற்க ஆரம்பித்து விட்டனர். அவர்கள் தங்கள் அந்தஸ்தைக் காப்பாற்றிக் கொள்ளவும் நகரத்திலிருந்த பழக்கம் காரணமாகவும் நாகரிகமாகவே வாழ விரும்புகின்றனர்.

இது தவிர வைத்திய வசதிகளுக்கு நகரங்களையே நாட வேண்டும். இதனால் ஏற்படும் செலவையும் கஷ்ட நஷ்டங்களையும் ஏற்றுக் கொள்ள வேண்டும். விவசாயத் தேவைகளுக்கான விதை, உரம் இவைகளுக்காக அடிக்கடி அலைய வேண்டியிருக்கிறது. விவசாயத்தில் புது முறைகளை மேற்கொண்டாலும் ஒரு ஜோடி காளைகளாவது கட்டாயம் இருக்க வேண்டும். காளைகள், பசுமாடு, கன்றுகள் இவைகளுக்குத்தீனி உற்பத்திசெய்யவும் வாழ்க்கைக்குத் தேவையான செலவுகளை சமாளிக்கவும் ஒருவருக்கு 50 ஏக்கரா நிலம் தேவையாயிருக்கும். இதற்கு மேல் இருந்தாலும் நேரடியாக விவசாயம் செய்வது சாத்தியமல்ல. ஆகையால் 50 ஏக்கரா நிலமே ஒருவருக்கு அதிகபட்சமாய் வைத்துச் சட்டம் செய்யலாம்.

பாம்பாட்டி
28—5—51 எஸ். வி. துரைராஜ்

★

நானே பாடுபடும் ஓர் விவசாயிக்கு 10 ஏக்கருக்குக் குறையாமல் சொந்தமாக நிலமிருக்கும்படி சர்க்கார் செய்ய வேண்டும். அந்த விவசாயிக்கு வேண்டிய அத்யாவசியமான பொருள்கள் கண்ட்ரோல் விலைக்குத் தாராளமாகக் கிடைக்க, ஒவ்வொரு கிராமத்திலும் கோவாப்ரேட்டிவ் ஸ்டோர்கள் ஏற்படுத்தி விவசாயத்துக்கு வேண்டிய பொருள்கள், பணங்கள் அங்கேயே கிடைக்கும்படி ஏற்பாடு செய்தல் வேண்டும்.

நம் தேசத்தில் 50 ஏக்கர் நிலம் ஒருவருக்கு இருந்தால் அவர் சுபிட்சமாக வாழ முடியும். ஆகையால் 50 ஏக்கருக்கு மேல் உள்ள நிலச்சுவான்தார்களிடம் இருக்கும் நிலங்களை சர்க்கார் தானே உழுது பாடுபடும் விவசாயிக்கு ஆளுக்குப் பத்து ஏக்கர் விதம் கட்டாயம் பகிர்ந்து கொடுத்தல் வேண்டும். கூடுதல் மகசூல் காண்பிக்கும் விவசாயிக்கு வருஷந்தோறும் சர்க்கார் பரிசு அளித்தல் வேண்டும். அப்படியானால்தான் நம் நாட்டில் விவசாயம் முன்னேறும். நாடும் தன் சுயதேவையைப் பூர்த்தி செய்து கொள்ள முடியும்.

கரண்டை
28—5—51 எம். எஸ். சின்னமணி

★

‘எத்தனை நிலம் வேண்டும்?’
என்று எனைக் கேட்டால்
‘ஆறடி நிலம் போதும்
அந்தியில் தலைசாய்க்க’
என்று கூறிவிட்டார்
எந்த னருந் தாத்தா ;
பின்னை ரொரு தோழர்
தன்னைப் போய்க் கேட்டேன்.

( அவன் சொன்னான் )

பாட்டாளி பிறவி படும்
பாட்டைக் கேளய்யா—என்
கூட்டாளி சொல்லியதைக்
கூவக் கேளய்யா !

ஏர் பிடித்தாகணும்
ஏற்ற மிறைக்கணும்
கார் விதைநடணும்
களைபின் பிடுங்கணும்

கதிர்தலை சாய்த்தால்
கத்தி பிடிக்கணும்
முதிர்ந்த நெல் மணிகளை
மூட்டையிற் கட்டணும்

வீட்டுக்கு வந்தால்
உலக்கைப் பிடிக்கணும்
போட்டதை உரலில்
பொன்போல் இடிக்கணும்

குத்தின நெல்லைக்
கூடையிற் கொட்டி
சுத்தி செய்யணும்
சுருக்கா முடிக்கணும்

அம்மா என்று
அனுத்தால் போச்சு
சும்மா அல்ல
சொல்கிறேன் கேளு !

அரை நாள் கூலி
    அறுந்திடுந் தாலி
நிறையா வயிறு
    நித்திய வாழ்க்கை
இத்துணை செய்வதும்
    யார் நிலத்திற்கு?
குத்தகை நிலமா
    கூலிக் குறைப்பா?
உழைப்பவன் வீட்டில்
    உணவுப் பஞ்சம்
உண்பவன் வீட்டில்
    ஊதிய மென்னுதல்

சிந்தனை செய்தேன்
    அந்தியில் இதனை
எந்தனைக் கேட்டால்
    இந்த முடிவில்
கூழைக் குடிக்கும்
    ஏழைத் தோழர்கள்
பேழையில் பணத்தைப்
    பெருக்கு நண்பர்கள்

எல்லோர் நிலத்தையும்
    எடுத்துப் பகிர்ந்தால்!
இல்லை பஞ்சம் நம்,
    தொல்லையுந் தீரும்!!

பத்து ஏக்கர்கள்
    பகிர்ந்து கொடுத்தால்
பஞ்சம் தொலையும்
    பட்டினி அழியும்

பசிப்பிணி மறையும்,
    பாட்டாளி பிழைப்பான்!
பஞ்சணை வாசியின்
    பருமனும் குறையும்!!

சமத்துவம் பிறக்கும்!
    சத்தியம் நிலைக்கும்!!
பாரதி யாருடை,
    பாட்டுகள் பலிக்கும்!!

வேலப்பாடி
30—5—51 தேவகி

★

இன்றைய உணவுப் பஞ்சத்திற்குக் காரணம் நாட்டிலே உள்ள நன்செய், புன்செய் நிலங்களில் பெரும்பகுதி குறிப்பிட்ட சில பெரும் நிலச்சுவான்தார்களிடம் இருப்பதே.

சர்க்கார் நம் நாட்டு மக்களின் முக்கிய உணவாகிய நெல்லுக்குக் கட்டுப்பாடு விலை ஏற்படுத்தி விட்டார்கள். சர்க்காரின் விலை நிர்ணயக் கட்டுப்பாட்டினால் பெரும் நிலச்சுவான்தார்கள் தங்கள் எண்ணப்படி தங்கள் நிலங்களிலிருந்து அதிக ஊதியம் அடைய முடியவில்லை. இதனால் பேராசை கொண்ட நிலச்சுவான்தார்கள் உணவு தான்யம் விளையும் நன்செய் நிலங்களில் வியாபாரப் பொருள்களாகிய கரும்பு, புகையிலை, நிலக்கடலை முதலிய அதிகப் பயன் தரும் பொருள்களை விளைவித்துப் பெரும் பணம் சேர்க்கின்றனர். இதைத் தடுத்தால் அந்நிலங்களைத் தரிசு போடுகின்றனர்.

இன்று உழைக்கும் உழவாளி வார முறையைப் பற்றிக் கேட்டால் உடனே அவன் மேல் குற்றம் சாட்டப்பட்டு நீக்கப் படுகின்றான். இதற்குப் பயந்து கால் வயிற்றுக் கஞ்சிக்காக உழைத்து, ஊக்கம் குன்றி நடைப்பிணமாக அலைகின்றான். இவ்வாறு கூலியைக் குறைப்பதால் பயிரிடுபவன் அந்நிய நாடு சென்று வறுமையிலின்று விடுதலை பெற எண்ணுகிறான்.

இந்நிலை மாற வேண்டும். பெரும் நிலச்சுவான்தார்களிடமிருந்து நிலங்களைப் பிடுங்கி உழவுத் தொழிலையே தனது வாழ்க்கையின் பிழைப்பாக நம்பியிருக்கும் விவசாயிகளுக்கு 30 ஏக்கரா நிலம் கொடுக்கப்பட வேண்டும். அவ்வாறு சீர்திருத்தம் செய்தால் நாடு முன்னேற ஒவ்வொரு விவசாயியும் உறுதியுடன் உழைப்பான் என்பதில் ஐயமில்லை.

சிதம்பரம்
27—4—51 சி. பி. வேலாயுதம்

★

இந்திய உழவனும் ஏரும் உழவு மாடும் உலகப் பிரசித்தி பெற்றவை. நூற்றுக்கு 72 பேர்கள் விவசாயத்தை ஜீவாதாரமான தொழிலாகக் கொண்டிருக்கிறார்கள். ஆனால் இவர்களுக்கு நிலத்திலிருந்து கிடைக்கக் கூடிய பலன் அவர்களின் சாப்பாட்டுக்குக் கூட போதாத நிலையிலிருக்கிறது. 'உழவன் கணக்குப்பார்த்தால் உழக்கு அரிசிகூட மிஞ்சாது' என்ற பழமொழியே இதை நன்கு எடுத்துக் காட்டும். பல்லாண்டு பல்லாண்டாக விவசாயத்தைத் தொழிலாகக் கொண்ட நமது நாடு இப்பொழுது உணவுப் பற்றாக்குறை நாடுகளில் ஒன்றாகி விட்டது. இதற்குக் காரணம் என்ன! பருவகால மழையின்மை, காலம் தவறிப் பெய்யும் மழையால் ஏற்படும் நஷ்டம், இயற்கையின் கொடூரச் செயல்கள், நிமிஷத்துக்கு நிமிஷம் ஏறும் ஜனப்பெருக்கத்திற்கு ஏற்றபடி விவசாய முறைகளை மாற்றாமல் பழைய முறையையே கட்டி அழுது கொண்டிருப்பது முதலியனவாகும்.

இதனால் நாட்டின் பொருளாதாரம் மிகவும் கேவல நிலையிலுள்ளது. இத்தருணத்தில் அதிக பலன் அடைய நிலத்தை எவ்விதம் பயிர் செய்ய வேண்டும், அதற்கு ஒருவனுக்கு எத்தனை நிலம் வேண்டும் என்ற கேள்வி முக்கியமாகிறது. அவ்விதம் பார்த்தால் ஒருவனுக்குக் குறைந்த அளவு 20 ஏக்கரா நிலமாவது வேண்டும். அந்நிலத்தைப் பழைய முறைப்படி பயிர் செய்தால்கூட பெற்றோருக்கு வசதியும் பிள்ளைகளுக்குக் கல்வியும் தனக்குத் திருப்தியும் தரக்கூடிய அளவுக்குப் பலன் கிட்டும்.

ஆகவே ஒவ்வொருவருக்கும் 20 ஏக்கரா நிலம் வேண்டும். அதற்குமேல் ஒரு தனி மனிதன் வைத்திருப்பதற்குச் சட்டம் இடந்தரக் கூடாது.

புதுக்கோட்டை
28—5—51 அ. சாத்தப்பன்

★

ஒரு தனி மனிதன் தனக்கென்று எத்தனை நிலம் வைத்துக் கொள்ளலாம் என்ற நிலப் பிரச்னை, மிகவும் சிக்கலான விஷயமாயினும், கம்யூனிசம், சோஷலிசம் பரவி வரும் இ

நாட்களிலே, அவசியமாகத் தீர்த்து முடிவு கட்டவேண்டிய விஷயமாகும்.

புரயிடங்கள் 75 ஏக்கருக்கு மேற்படாமலும், வயல் 50 ஏக்கருக்கு மேற்படாமலும் ஒரு மனிதன் வைத்திருக்கலாம் என்று ஆலோசனை கூறியது திருவிதாங்கூர்—கொச்சி சர்க்கார் நிலக்கமிட்டி. அதனைப் புனராலோசனை செய்து மேற்படி சர்க்கார் 50 ஏக்கர் புரயிடமும், 30 ஏக்கர் வயலும் தனி மனிதன் வைத்திருக்கலாம் என்று நிர்மானித்திருக்கிறது.

கோடிக்கணக்கானவர்கள், அதிலும், விசேஷமாக வயல்களிலே இரத்த வியர்வை சிந்தும் விவசாயிகள், 'கஞ்சிக்குப்' பரிதவிக்க, ஒரு சிலர் நூற்றுக்கணக்கான ஏக்கர் வயல்களையும் புரயிடங்களையும் வைத்து சுகபோகம் அனுபவித்துக் கொண்டிருப்பது சகிக்க முடியாதது தான். சர்க்கார் இந்த வேதனையை மாற்ற வேண்டும் என்பது பெரும்பாலரது அபிப்பிராயம். எனவே செல்வம் ஒரு சிலரிடம் குவிந்து கிடப்பதைப் பறித்து, பரவல் முறையைச் சர்க்கார் ஏற்படுத்த வேண்டும்.

எனவே எனது தாழ்மையான அபிப்பிராயம், ஒருவனுக்குக் கூடுதல் 20 ஏக்கர் புரயிடமும், 10 ஏக்கர் வயலும் இருப்பது போக, மீதியை சர்க்கார் கைப்பற்றிக் கூட்டுறவு முறையில் பல ஏழைகளுக்குப் பகிர்ந்துவிட்டு, நன்றாக நடைபெறக் கண்காணிக்க வேண்டும்.

நாகர்கோயில்
29—4—51 எஸ். பி. சங்கர்

முதலில் பயிர்த் தொழிலில் பழைய முறைகள் ஒழிந்து புதிய முறைகள் வரவேண்டும். கலப்பைகளையும், ஏர்களையும் கைவிட்டு நூதன முறைகளைக் கையாள வேண்டும்.

நூதன முறைகளைக் கையாண்டு நாட்டில் சிதறிக் கிடக்கும் நிலங்களை ஒன்று படுத்தவேண்டும். பட்டணங்களில் வசித்துக் கொண்டு தங்கள் நிலம் எது என்று கூடத் தெரியாதவர்களைப் பயிர்த் தொழிலில் ஈடுபட இழுக்க வேண்டும்.

'ஒரு நபருக்கு 30 ஏக்கராவுக்குமேல் நிலம் இருக்கக் கூடாது' என்ற சட்டம் இயற்ற வேண்டும். ஒவ்வொரு விவசாயிக்கும் 50 ஏக்கராக்கள் வீதம் பிரித்துக் கொடுக்க வேண்டும்.

சர்க்காரே விவசாயிக்கு இலவசமாகப் பயிர்த் தொழிலில் உதவி செய்ய முன்வர வேண்டும். மின்சார வசதிகளையும் இதர வசதிகளையும் சர்க்காரே செய்து கொடுக்க வேண்டும். டிராக்டர் போன்ற நூதன இயந்திரங்களின் உதவியை இலவசமாக அளிக்க வேண்டும். விவசாயிகளுக்கு எப்பொழுதும் வட்டியில்லாக் கடன் அளிக்க முன் வரவேண்டும் நம் சர்க்கார். இதற்குக் கைம்மாறாக, விளையும் பயிரில் இவ்வளவு பாகம் கொடுத்துவிட வேண்டுமென்று சர்க்கார் விவசாயிகளுடன் ஒரு ஒப்பந்தம் செய்து கொள்ளலாம்.

கரூர்
30—5—51 ஆர். நாராயணன்



அச்சிறுபாக்கம் கிராமத்து உயர்நிலைப் பள்ளி ஆண்டு விழா ஜில்லா போர்டு தலைவர் ஸ்ரீ வி. கே. ராமசாமி முதலியார் தலைமையில் வெகு சிறப்பாக நடந்தது. அந்த வைபவத்தின்போழுது நம் பாரதக் குடியரசின் முதல் ஜனாதிபதி ராஜேந்திர பிரசாத் அவர்களின் திருவுருவப் படம் திறந்து வைக்கப்பட்டது.




அந்த வித்தியாலயத்தின் புதிய கட்டிடத்துக்கு அன்று அஸ்திவாரக்கல் நாட்டப்பட்டது. விழா ஆரம்ப முதல் கடைசி வரையில் ஜனங்கள் மிகவும் உற்சாகத்துடன் இருந்தனர். பிரேமா ஒரு நிமிஷம் நின்ற இடத்தில் மறு நிமிஷம் இல்லாமல் ஓடிய வண்ணம் இருந்தாள். அவளோடு கூட இருந்து விழாப் பந்தலுக்குத் தோரணம் கட்டியதிலிருந்து பிரசங்கிகளுக்கும் தலைவருக்கும் மாலை போட்டது வரையில் ஒன்று கூட விடாமல் கவனித்துக் கொண்டவன் தியாகராஜன் தான். பிரேமாவுக்குக்கூட அவனுடைய சுறுசுறுப்பையும் திறமையையும் நினைக்க அதிசயமாகத்தான் இருந்தது. அவள் எந்த வேலையைச் செய்ய வேண்டும் என்று பரபரப்புடன் ஓடிப் போய்ப் பார்க்கிறாளோ அந்த வேலை எற்கெனவே செய்யப் பட்டிருக்கும்.

இயற்கை அழகோடு செயற்கை அழகும் சேர வந்திருந்த கூட்டம் ஒரு வண்ணப் பூந்தோட்டம் எனத் திகழ்ந்தது. அங்கங்கே யிருந்த ஆண்மணிகள் வெறும் இலைகளாகவும் காய்களாகவும்தான் விளங்கினார்கள்; பெண்மணிகளெல்லாம் மலர்கள்!

பிரேமாவும் தியாகராஜனும் புன் சிரிப்புடனும் கூப்பிய கரங்களுடனும் வாசலில் நின்று வந்தவர்களை வரவேற்ற வண்ணம் இருந்தனர்.

பிரேமாவைப் பார்க்கும்போது அவள் அம்மா மீனாட்சியின் மனசில் இனந் தெரியாத மகிழ்ச்சி இடம் பெற்றது. கௌரவமாக நாலு பேர் மதிக்கத்தகுந்த நிலையில் இன்று அவள் பெண் இருப்பதைக் கண்ட அவள் தாயுள்ளம் பூரிப்படைவது இயல்புதானே!

பிரேமா கல்லூரியில் படித்து வந்தபோதே அந்த வித்தியாலயத்தை ஆரம்பித்துத் தன்னைப் போன்ற திக்கற்ற பெண்களுக்கு நூல் வேலை, தையல் வேலை, சங்கீதம் முதலிய வித்தைகளை எளிய முறையில் கற்பித்து வந்தாள். அவளுடைய இடைவிடா உழைப்பின் காரணமாக மாணவிகள் பலர் சேர்ந்தனர். அவளுக்கு அதில் ஊதியம் அதிகம் இல்லாவிட்டாலும் உற்சாகம் அதிகம் இருந்தது.

கல்லூரிப் படிப்பு முடிந்ததும் பிரேமா முழு நேரமும் அதிலேயே ஈடுபட்டு வேலைசெய்தாள். அப்பொழுது அவளோடு பங்கெடுத்துக் கொண்டு சேவை உணர்ச்சியோடு தொண்டாற்ற இன்னும் ஒருவர் வேண்டியிருந்தது. ''பெண்கள் ஆரம்ப வித்தியாலயத்தில் தொண்டாற்ற ஒரு பெண்மணி தேவை. அவர் பெண்களுக்கேற்ற சங்கீதம், நடனம், பூ நூல் வேலை முதலிய வித்தைகளில் தேர்ந்தவரா யிருக்க வேண்டும்!'' என்று பத்திரிகைகளில் விளம்பரம் செய்தாள். ஒரு மாசம் தொடர்ந்து விளம்பரம் செய்தும் பயன் இல்லை. இரண்டொரு பெண்மணிகள் நேரில் வந்து பார்த்துப் பேசிவிட்டுச் சம்மதிக்காமல் போய் விட்டனர். ஊதியம் குறைவா யிருந்ததுதான் காரணமா யிருக்கலாம். பிரேமாவுக்கே அது நன்கு தெரிந்ததுதான். அவள் என்ன செய்வாள், பாவம்! பல பெரிய மனிதர்களின் நன்கொடைகளைக் கொண்டு அவள் அந்த ஸ்தாபனத்தை எத்தனையோ இன்னல்களுக்கு மத்தியில் திறமையோடு நிர்வகித்து வந்தாள்.

கடைசியில் தியாகராஜன் அனுப்பி யிருந்த மனுவைத்தான் அவள் வேண்டா வெறுப்புடன் அங்கீகரிக்க வேண்டியதாயிற்று.

தியாகராஜன் ஒரு பட்டதாரி. உழைப்புக்கு அஞ்சாதவன். அவன் வந்து சேர்ந்ததிலிருந்து பிரேமாவுக்கு வேலையே இல்லை என்று சொல்

னும்படி ஆகி விட்டது. வித்தியாலயக் கணக்கு முதல் எல்லாவற்றையும் அவனே கவனித்துக் கொண்டு வந்தான்.

இளைஞனானாலும் மிகவும் கம்பீரமான மனப் போக்குள்ளவனா யிருந்தான். பிரேமாவிடம் மிகவும் மரியாதையாக, ஆனால் கூச்சமின்றித் தாராளமாக நடந்து கொண்டான். அவன் பார்வையிலோ பேச்சிலோ இளமையின் சேஷ்டைகள், குறும்புத்தனம் ஒன்றும் காணப்பட வில்லை. ஆனால் அவன் பார்வையில் ஏதோ ஒன்று இருந்துகொண்டு அவளை அவனுக்குப் பணிய வைத்தது. அவள் மிகவும் சாமர்த்திய மாக அதை வெளியில் காண்பித்துக் கொள் ளாமல் இருந்தாள்; ஆயினும் அவளையும் அறியாமல் அவனைக் காணும்தோறும் அவ ளிடம் ஒரு மாறுதல் ஏற்படத்தான் செய் தது; பொத்தானை அழுத்ியதும் 'குப்' பென்று பற்றி எரியும் மின்சார விளக்கைப் போல், அவனைக் காணும்போது அவள் முகம் பிரகாசம் அடைவானேன்!

வித்தியாலயத்தில் தியாகராஜன் சேர்ந்து தொண்டாற்றுவதை மீனாட்சியம்மாள் துளிக் கூட விரும்பவில்லை. ஆனால் பிரேமா மட்டும் எத்தனை நாளைக்குத் தனியாக வித்தியாலய வேலைகளைக் கவனிக்க முடியும்! ஆகவே, அவள் வேண்டா வெறுப்பாக அவனை அநு மதித்தாள். ஆனால் தியாகராஜன் வந்து சேர்ந்த சில நாட்களுக்குள்ளாகவே மீனாட்சி யம்மாளுக்கு அவன்மீதிருந்த வெறுப்பு மறைய ஆரம்பித்தது. ஏன்! ஆண் வர்க்கத்தின்மீது அவளுக்கு இருந்த வெகு நாளைய கசப்புக்கூட மாற ஆரம்பித்தது என்றே சொல்லவேண்டும்.

அப்பப்பா! சிறு வயதிலிருந்து அவள் பட்ட கஷ்டங்கள் கொஞ்ச நஞ்சமல்ல. அவையெல் லாம் சென்று போன சம்பவங்களானாலும் அவற்றை நினைத்துப் பார்த்தாலே மீனாட்சி யம்மாளுக்கு மனசுக்குக் கஷ்டமா யிருந்தது.

பால்யத்தில் தகப்பனையும், இளமையில் கணவனையும், முதுமையில் மகனையும் எதிர் பார்த்தே பெண்ணாய்ப் பிறந்தவள் பிழைக்க வேண்டும் என்னும் உலக நியதிக்குத் தன் பெண் பலியாகிவிடக் கூடாது என்னும் உறுதி அவள் மனத்தில் நிலைத்து நின்றது. அப்பொழுது பத்து மாதக் குழந்தையாயிருந்த பிரேமாவுடன் புருஷனால் கைவிடப்பட்டு, திக்கற்ற நிலையில் தான் நின்ற காட்சி இப் பொழுதும் அவள் நினைவுப் பாதையில் பசு மையா யிருந்தது. அவளைக் கண்டு இரங்கியோ, அல்லது ஏளனம் செய்யும் உத்தேசத்துடன் தானோ இயற்கை அன்னை அவளைச் சும்மா விட்டு வைக்காமல் ஒரு குழந்தைக்குத் தாயாக்கி யிருந்தாள்.

எட்டாவது வயதிலேயே மீனாட்சிக்குத் தாலிக்கட்டு. கணவனின் அடிக்கும் கையைக் கண்டாளே தவிர அணைக்கும் கையை அவள் கண்டதில்லை. குழந்தை பிறந்ததில் அவளுக்கு மனத் திருப்திதான் என்றாலும் அதுவும் தன்னைப்போல ஒரு பெண்ணாகப் பிறந்து விட்டதில் அவளுக்கு ஓரளவு வெறுப்பும் இல்லாமல் இல்லை.

புக்ககத்தில் அவள்மீது சுமத்திய குற்றச் சாட்டுகள் கேட்பதற்கு விநோதமானவை; ஆனால் நினைப்பதற்குக் கொடுமையானவை. அவள் ஏழைக் குடும்பத்தில் பிறந்தது, முதல் குற்றம்; பெற்றோரை இழந்தது அடுத்த குற்றம்; பிறந்தகத்துக்குச் சென்று வரும் போதெல்லாம் சீர் செனத்திகளோடு வரவில்லை என்பது மற்றொரு குற்றம்.

பிறந்த சில நிமிஷங்களில் தாயை இழந்த மீனாட்சி, விவாகமான சில மாதங்களில் தந்தையையும் இழந்தாள்.

மீனாட்சியைப் புருஷன் வீட்டில் சேர்க்கும் பொறுப்பு அவள் அத்தையின்மேல் விழுந்தது. அவள் ஒருவாறு தன்னால் இயன்றதைச் செய்து மீனாட்சியைப் புக்ககத்தில் சேர்த்தாள்.

மீனாட்சியைப் பொறுத்த வரையில் நரகத் தின் மற்றொரு பெயர்தான் புக்ககம்.

மனிதர்களுடைய விருப்பு வெறுப்புகளை எதிர்பார்த்தா வாழ்க்கையில் எல்லாம் நடை பெறுகிறது! பல குழந்தைகளைப் பெற்ற வர்கள் விரும்பித்தான் அக்குழந்தைகளைப் பெற்றுக் கொண்டார்கள் என்று யாராவது சொல்ல முடியுமா! அதேமாதிரி, கணவனின் அன்புக்கும் ஆதரவுக்கும் ஏங்கிக் கிடந்த அவ ளுக்கு, பல கொடுமைகளுக்குள்ளாகி அடிமை போல் உழன்று வந்த அவளுக்கு, இந்தக்



குழந்தை பிறந்தது பற்றி என்ன சொல்ல முடியும்! ஏதோ ஒரு சமயம் அவள் கணவனும் அவளிடம் மனிதனைக் கடந்து கொண்டிருக்கிறான் என்றுதான் சொல்ல வேண்டும்!

பூரண கர்ப்பிணியான மீனாட்சி அநாதையைப் போலத் தன்னந் தனியளாகத் தன் அத்தை வீட்டுக்குச் செல்லவேண்டி வந்தது. ஏற்கனவே வறுமையில் அடிபட்டுக் கிடந்த அத்தைக்கு மீனாட்சி ஒரு பாரமாகவே தோன்றினாள். கடைசியில் மீனாட்சி ஒரு தர்ம ஆஸ்பத்திரியைப் புகலாக அடைந்து பிரேமாவைப் பெற்றெடுத்தாள்.

வறண்டுபோன அவள் வாழ்க்கையில் குழந்தை பிரேமா புத்துயிர் ஊட்டினாள். சோர்ந்து கிடந்த அவள் உள்ளத்தில் உற்சாகத்தை அளித்தாள். தங்க விக்கிரகம்போலிருந்த குழந்தையின் சிரிப்பிலும் பார்வையிலும், மீனாட்சி தன்னையும் தன் கஷ்டங்களையும் சில காலத்துக்கு மறந்திருந்தாள்.

பிரேமாவுக்கு ஒரு வயதாகியும், மீனாட்சியின் புக்ககத்திலிருந்து யாரும் வந்து அழைத்துப் போகிற வழியாயில்லை. மேலும் ஆறு மாதம் ஆகி விட்டது. மீனா கைக்குழந்தையுடன் பொங்கிவரும் கண்ணீரைத் துணையாகக் கொண்டு கணவன் வீட்டுக்குத் தானாகவே போனாள். அவனிடமிருந்து கடிதமும் பலமாதங்களாக இல்லையாதலால் மீனாட்சி குழம்பிய மனத்துடன் தான் சென்றாள். அங்கே யாரும் அவளை ஏறெடுத்துப் பார்க்கவும் தயாராயில்லை. மீனாட்சி கண் கலங்கிக் கால்



கடுக்க நின்றதுதான் மிச்சம். அவள் கணவன் வேறு கல்யாணம் செய்துகொண்டு விட்டான் என்று தெரிந்த பின்பு அவள் அங்கேயிருந்து என்ன பிரயோஜனம்!

கடைசியில் மீனாட்சி ஒரு பெரிய மனிதரின் உதவியால் சென்னைக்கு வந்து குழந்தை பிரேமாவை அநாதை விடுதியில் சேர்த்துவிட்டு, தான் அந்த விடுதியின் சமையல் வேலையை மேற்கொண்டு காலந் தள்ளலானாள்.

காலொரு மேனியும் பொழுதொரு வண்ணமுமாகக் குழந்தை பிரேமா வளர்ந்து வருவதைத் தூர இருந்து பார்த்து உள்ளூறப் புளகாங்கிதம் அடைவாள், மீனாட்சி.

பிரேமாவின் வனப்பும், புத்திசாலித்தனமும் அவளிடம் எல்லோரையும் பிரேமை கொள்ளும்படி செய்தன.

மலரும் தருணத்தை எதிர்பார்த்திருக்கும் மலரின் அரும்புபோல் இருந்த பிரேமா காலப் போக்கில் மணங் கமழும் மலரானாள்.

ஈசப்புத்தரும் தன் வாழ்க்கையின் பழைய சம்பவங்களை யெல்லாம் மீனாட்சி அடியோடு மறந்து விட்டாள். இப்பொழுது அவளது கவனமெல்லாம் பிரேமாவிடம்தான் இருந்தது.

சூடுண்ட பூனை அடுப்பங் கரையைக் கண்டு அஞ்சுவதுபோல, விவாகத்தினால் எண்ணிறந்த கஷ்டங்களை அநுபவித்திருந்த மீனாட்சியம்மாள் தன் பெண்ணுக்கு விவாகம் செய்விக்க வேண்டும் என்னும் எண்ணத்தையே மறந்திருந்தாள். 'கல்வியில் நன்றாய்த் தேர்ச்சி பெற்று அவள் ஔவையாரைப்போல் தூய கன்னி வாழ்வு வாழட்டுமே!" என்று அவளது உள் மனம் அடிக்கடி எண்ணமிடும்.

தாயின் எண்ணத்துக்கு ஏற்பப் பிரேமா இன்னமும் விவரம் தெரியாத பெண்ணாகவே இருந்தாள். காட்டில் வாழும் மானைப்போல் களங்கமற்றுத் துள்ளித் திரிந்தாள். பொது சேவைக்கென்றே பிறந்தவள் மாதிரி உற்சாகத்துடன் அவள் கலாசாலை நேரம் தவிர மற்ற நேரங்களில் மாதர் சேவா சங்கத்திலும் மற்றும் அநாதை ஆசிரமத்து அலுவல்களிலும் தீவிரமாகப் பங்கெடுத்துக் கொண்டு சேவை செய்தாள்.

ஒருநாள் மீனாட்சியம்மாள் பிரேமாவின் மனசில் உள்ளதை அறிய எண்ணி, "பிரேமா, எதற்கெல்லாம் நீ உழைக்கிறாய்! எத்தனையோ பெரிய மனிதர்களை உனக்குத் தெரிந்திருக்கிறது. நான் உனக்கு வரன் தேடிக் கல்யாணம் செய்விக்கிற நாள் தாண்டி விட்டது. நல்ல பணக்காரனும், படித்தவனும், பெரிய குடும்பத்தைச் சேர்ந்தவனுமான உன் வயதுக்கேற்ற ஒருவனைப் பார்த்துக் கல்யாணம் செய்து கொள்ளேன்!" என்றாள்.

"அம்மா, உன் ஆசையைக் கண்டு சிரிக்கட்டுமா, அழட்டுமா! நீ சொல்லுகிறமாதிரி

ஒருவன் இலேசில் கிடைத்து விடுவானா! இந்தப் பெரிய மனிதர்களின் வெளித் தோற்றத்தைக் கண்டு மயங்கி விடாதே! திவான்பகதூர் ஆதிவராகாச்சாரியார் பெண் கமலா என்னோடு முன்பு படித்துக் கொண் டிருந்தாளே நினைவு இருக்கிறதா! அவ ளுக்குக் கல்யாணத்தின்போது இரண்டு 'காரட்' அதிகப்படி வைரங்கள் இழைத்து 'நெக்லேஸ்' பண்ணி விட்டார்களாம். அதற் காக மூத்த பெண் கோபித்துக்கொண்டு பெற்ற வர்களோடு பேசுவதில்லையாம்! எப்பொழுதும் தூரத்துப் பச்சை கண்ணுக்குக் குளிர்ச்சியா யிருக்கும். அம்மா! என்னுடைய மனம் கல் யாணத்திலேயே நாட்டங் கொள்ளவில்லை!" என்று சொல்லிப் பிரேமா அத்துடன் அந்தப் பேச்சுக்கு முற்றுப்புள்ளி வைத்து விட்டாள்.

இதற்குப் பிறகுதான் தியாகராஜன் வந்து சேர்ந்தான். வித்தியாலயம் விரிவடைந்தது. அவனுடைய இடைவிடா உழைப்பின் பல னாகப் பலர் நன்கொடை கொடுத்தனர். வித்தியாலயத்தின் புதுக் கட்டட வேலை தொடங்கப்பட்டு விட்டது. தியாகராஜன் சிறிதும் சோம்பலின்றி வெய்யில், மழையை யெல்லாம் பொருட்படுத்தாமல் தன் அறைக் குக்கூடப் போகாமல் வித்தியாலயத்தைக் கவனித்துக் கொண்டான். தூரத்தில் தனக் கென்று ஒரு அறை ஏற்பாடு செய்து கொண்டு தியாகராஜன் அங்கிருந்து தினம் வித்தியாலயத் துக்கு வந்து போய்க் கொண்டிருந்தான். மற்ற உபாத்தியாயினிகளை நிமிர்ந்து கூடப் பார்க்க மாட்டான். தான் உண்டு தன் வேலை உண்டு என்று இருப்பான்.

மீனாட்சியம்மாளுக்கு அவனைக் காணும் போதெல்லாம் பிரேமாவின் கல்யாணத்தைப் பற்றி அவள் கொண்டிருந்த எண்ணம்கூடக் கொஞ்சம் சரிந்தது.

ஒரு நாள் அலங்கோலமாகக் கிடந்த பிரே மாவின் புத்தக அலமாரியைத் தட்டித் துடைத்து ஒழுங்குபடுத்திக் கொண்டிருந்தாள் மீனாட்சியம்மாள். ஒரு புத்தகத்தை எடுத்த போது ஒரு கடிதம் அதற்குள்ளிருந்து உறை யோடு வெளியே வந்து விழுந்தது. பிறருடைய கடிதங்களை அவருடைய அனுமதியின்றிப் படிப்பது பண்பாட்டுக்குக் குறைவுதான். இருந் தாலும் தன் பெண்ணுக்கு வந்த கடிதம் என்கிற காரணத்தால் அதை என்ன என்று பார்க்கத் தூண்டிய ஆசையை அவளால் அடக்க முடியவில்லை.

கடிதத்தை வெளியில் எடுத்துப் படித்தாள்... அன்புள்ள பிரேமாவுக்கு,

இன்று கண்ணன் பிறந்த நாள். எங்கும் பிறப்பான்; எல்லா வீட்டிலும் பிறப்பான்.

ஆனால் உனக்கென்று ஒரு நிஜக் கண்ணன் என்று பிறப்பான்! எப்பொழுது பிறப்பான்!

எப்படியும் பிறந்தே தீருவான் என்றே நான் நம்பிக்கை கொண்டிருக்கிறேன்.

ஒரு சமயம் நீ சொன்னதுபோல், உலகத்தி லுள்ள ஆண்களனைவரும் பெண்களைத் தங்கள் தாய்மார்கள் போலப் பாவித்துக் கொண்டா லும், பெண்கள் ஆண்களைத் தந்தைமார்க ளாகத் தானே பாவித்துக் கொள்ளவேண்டும்?

அப்படியானால், எப்படிப் பார்த்தாலும் அந்தப் புருஷன் - மனைவி என்ற முறையில் தானே வந்து நிற்கிறது! அந்த நிலையில்தானே அன்பும் உயிர் வாழ்கிறேன் என்கிறது!

இல்லை, பெண்கள் ஆண்களைத் தங்கள் பிள்ளைகளாகப் பாவித்துக் கொண்டாலும், அந்தப் பிள்ளைகளுக்குத் தகப்பன் என்று ஒரு 'தடியன்'' இருந்து தானே யாகவேண்டும்?

ஆகவே நீ என்னை எப்படிப் பாவித்துகொண் டாலும் சரி, அப்படியே நானும் உன்னைப் பாவித்துக் கொள்ளச் சித்தமா யிருக்கிறேன்.

என்னைப் பற்றி—இந்த ஏழை அநாதையைப் பற்றி—உலகத்தில் 'அன்பு என்று ஒன்று இருக்கிறதே, அதையே தன் வாழ்க்கைக்கு ஆணி வேராக எண்ணிக்கொண்டிருக்கும் இந்த அடிமையைப் பற்றி—தெரிந்து கொள்ள எத் தனை வருஷங்கள் வேண்டுமானாலும் அவகாசம் எடுத்துக் கொள். அதுவரையில் நான் பொறுத் துக் கொண்டிருப்பேன்.

அவசரம் இல்லை; நிர்ப்பந்தம் இல்லை; பலாத் காரம் செய்யவில்லை; பயமுறுத்தவும் இல்லை. இந்த விஷயத்தில் என் அன்பைத் தவிர வேறு எதையும் பிரயோகிக்க முடியாது. ஆகவே நீ எந்த முடிவுக்கும் தைரியமாக வரலாம்!

உன் வாழ்க்கையை என்னுடனோ, அல்லது என்னிலும் சிறந்த வேறு ஒருவருடனோ பகிர்ந்து கொள்ளுவதென்றால் உன் தாயாரைப் பிரிவது லேசான காரியமா யிராது என்கிறாய். உன் அம்மாவின் சம்மதம் பெற்று மட்டும் நாம் இருவரும் வாழ முடியும் என்றால் அவளைப் பிரிய வேண்டிய அவசியமே யிராது. இந்த உலகத்தில் அதைவிட மகிழ்ச்சி தரும் காரியம் எனக்கு வேறு எதுவுமே இருக்க முடியாது.

அது முடிகிற காரியமா! உன் மனம் சம் மதிக்குமா!

உன் அருமைத் தாயாருக்காக நீ நடத்தும் தியாக வாழ்க்கை என்னைப் புளகாங்கிதம் அடையச் செய்கிறது. உன் தந்தை அவளுக்கு



"நான் பத்திரிகைக்குப் பதி லாக ரேடியோ வாங்கலாம் என்று பார்க்கிறேன்!"

"ரேடியோ வாங்கினால் ஆபீ ஸுக்கு டிபன் எடுத்துக் கொண்டு போக அது உபயோகப் படாதே!"

இழைத்த கொடுமைகளுக்குப் பிராயச்சித்தமாக, உன்னை வளர்த்து உருவாக்கித் தற்போதைய கௌரவமான நிலைக்குக் கொண்டு வர அவன் பட்ட பாடுகளுக்கும் அநுபவித்த இன்னல்களுக்கும் ஈடாக, அவருடைய வாழ்க்கை இனியேனும் ஒளியுள்ளதாக்க உன்னாலானதை நீ செய்ய வேண்டும் என்று நான் பரிபூரணமாக விரும்புகிறேன். எனக்காகக் கூட நீ தோல்வி அடைவதை நான் விரும்ப மாட்டேன். ஆனால் பிரேமா, ஒரு விஷயம். வாழ்க்கையில் வஸந்தம் என்பது ஒருமுறை தானே வரும்! நீ பிடிவாதம் பிடித்து இன்று நீ 'போ போ' என்றால் அது போய்விடும். அப்புறம் என்னதான் நீ வருந்தி அழைத்தாலும் அந்த வஸந்த ருது வரும்என்று நினைக்காதே!

அநுபவத்துக்கு அதிகமாகவே அமைந்து விட்ட உன் அறிவு பயனுள்ளதாக வேண்டும். வாழ்க்கையில் நீ பெருமையடைய வேண்டும். பொய்யும் பித்தலாட்டமும் நிறைந்த இந்தச் சமுதாயத்தில் நீ தன்மதிப்புடன் தலை நிமிர்ந்து நடக்க வேண்டும் என்பதே என் பிரார்த்தனை.

உன் அன்புள்ள,

தியாகு.

இக் கடிதத்தைப் படித்ததும் மீனாட்சியம்மாளுக்கு வானமே தலையில் இடிந்து விழுந்ததுபோல் இருந்தது. சிறிது நேரம் வரையில் கடிதமும் கையுமாக உட்கார்ந்து விட்டாள்.

தான் வாழ்க்கையில் இதுவரையில் பட்ட சிரமங்கள், சங்கடங்களெல்லாம் அவள் மனக்கண்முன் விரிந்து விசுவ ரூபமெடுத்து விட்டன. விவாகம் என்னும் பந்தத்தில் சிக்காமல் தன் பெண் நிம்மதியாக வாழவேண்டும் என்னும் அவளது நெடு நாளைய எண்ணம் ஈடேற வழியில்லையோ என்று தோன்றியது.

சிறிது நேரத்துக்குப் பிறகு அவளது பழிவாங்கும் எண்ணம், அர்த்தமற்ற ஆத்திரம் இவையெல்லாம் நியாயமானவைதானா என்ற எண்ணம் அவளது மனதில் தலை தூக்க ஆரம்பித்தது. தன்னுடைய மண வாழ்க்கை நன்கு அமையவில்லை என்ற ஒரே காரணத்தைக் கொண்டு தனது பெண்ணின் வாழ்க்கையைப் பாழாக்குவதா! இது என்ன கொடுமை! இது நியாயமாகுமா!......பழைய எண்ணங்களெல்லாம் தாமாகவே கொஞ்சம் கொஞ்சமாகப் பலம் இழந்து மறையத் தொடங்கின.

கையிலிருந்த தியாகராஜனின் கடிதத்தை மீண்டும் ஒரு முறை படித்துப் பார்த்தாள். கடிதத்தில் கண்ட அறிவு நிறைந்த வாக்கியங்களும், உணர்ச்சி மிகுந்த கருத்துக்களும் கடைசியாக, அவன் பிரேமாவிடம் கொண்டிருக்கும் உண்மையான பிரேமையும் அவளை இன்னும் நெகிழச் செய்தன. தன் பெண் விஷயமாக அவள் செய்திருந்த முடிவு மிகத் தவறானது, இயற்கைக்கு முரணானது, மகா பாவமும்கூட என்று அவள் மனம் இடித்துக் கூறியது.

மீனாட்சியம்மாள் கடிதத்தை மீண்டும் அப் புத்தகத்திலேயே வைத்து விட்டாள்.

வித்தியாலய விழா சம்பந்தமான வேலைகள் இன்னும் பிரேமாவை விட்டபாடில்லை. அன்றைக்குத்தான் பிரேமா அலுப்பு நீங்க அம்மா பக்கத்தில் வந்து உட்கார்ந்தாள்.



"அந்தத் தியேட்டரிலே இப்பொழுது என்ன நடக்கிறது?"
"ரிப்பேர் நடக்கிறது!"
"ஓஹோ! அது தமிழ்ப் படமா, இங்கிலீஷ்ப் படமா?"

"அம்மா, தியாகராஜன்கூட வந்திருக்கிறார். பாவம், அவருக்குத்தான் ரொம்ப சிரமம். அவர் இல்லை என்றால் இந்த விழாவை நாம் இவ்வளவு சிறப்பாக நடத்தியே இருக்க முடியாது......!" என்றாள் பிரேமா.

தியாகராஜன் பணிவோடு மீனாட்சியம்மாளுக்கு வணக்கம் செலுத்தியபடியே வந்து நாற்காலியில் அமர்ந்து, "அதெல்லாம் ஒன்றும் இல்லை. நீங்கள் வேலையில் காட்டிய அக்கறையும் சுறுசுறுப்பும்தான் என்னை வேலை செய்யத் தூண்டிற்று!" என்றான்.

"அம்மா, நீதான் அவருக்குச் சொல்ல வேண்டும். உடம்பைக் கவனித்துக் கொள்ள மாட்டேன் என்கிறார். சதா காலமும் வேலை, வேலை என்று அதிலேயே உழல்கிறார்!" என்றாள் பிரேமா குறும்பாகச் சிரித்துக் கொண்டு.

"பிரேமா, இனிமேல் நீ எதற்கும் என் போஷிகை நாடக் கூடாது. தியாகராஜனின் கரம் பிடித்து அவரை நடத்த வேண்டும். வித்தியாலயத்தில் மட்டுமல்ல; வாழ்க்கையிலுங்கூட அவருக்கு நீ துணைவி; உனக்கு அவர் துணை. எனக்கு நீங்கள் இரண்டுபேருமே துணை. என் புத்தியை மறைத்துக் கொண்டிருந்த திரை விலகி விட்டது. உடனே முகூர்த்தம் வைத்து விட வேண்டியதுதான். அவருக்கும் மனிதர்கள் யாரும் இல்லை. நமக்கும் யாரும் இல்லை. எனக்கு உள்ள ஆசை ஒன்றுதான். நீ தியாகுவின் மனைவியாக வேண்டும். உங்களுக்கென்று ஒரு சிறுக் கண்ணன் பிறக்க வேண்டும். பார்த்து நான் மகிழ வேண்டும்......!" என்று உணர்ச்சியுடன் மீனாட்சியம்மாள் பேசினாள்.

பிரேமாவின் முகம் சிவந்து விட்டது. தியாகராஜனும் அவளும் கடைக் கண்ணால் வியப்புடன் பார்த்துக் கொண்டார்கள்.

அம்மாவின் மனம் திடீரென்று மாறியது பிரேமாவுக்கு ஆச்சரியமாகத்தான் இருந்தது.




எங்கும் அராஜகம் நிலவியது. நாள் தோறும் கொலையும் கொள்ளையுமாக இருந்தது. அழகுக்குப் பெயர் பெற்ற அந்தப் பெரிய நகரம் சுடுகாடாகத் தோற்றமளித்தது. மதத்தின் பெயரால் மனிதன் மனிதனைக் கொன்றான்; குத்தினான்; வெட்டினான்; கடித்தான்; கிழித்தான். ஹிந்துக்கள், முஸ்லிம்கள்! இவர்களுடைய நிழல்கள் ஒன்றையொன்று கடந்து சென்றால் போதும். அவ்விடத்தில் பயங்கரமான கொலைகள் நிகழ்ந்தன; சவங்கள் கிடந்தன. மனித நாகரிகம் சாம்பலாக எரிக்கப்பட்டு வந்தது!

கொலைக் கூட்டத்தினர் வந்து கும்பல் கும்பலாகக் கொலை செய்து தீர்த்தனர். அந்தப் பயங்கரக் கொலைகளிலிருந்து நாங்கள் ஒரு மாதிரித் தப்பிப் பிழைத்து ஹிந்துக்களும் சீக்கியர்களும் தங்கியிருந்த முகாமுக்கு வந்தோம். அவர்கள் இந்தியாவுக்குச் செல்வதாக இருந்தனர்.

அந்தச் சமயத்தில்தான் டில்லியிலிருந்த எங்கள் தலைமைக் காரியாலயத்திலிருந்து எனக்கு ஒரு தந்தி வந்தது. டில்லியில் கலகக் கூட்டத்தினர் எங்கள் தலைமைக் காரியாலயத்துக்கு நெருப்பு வைத்து விட்டனர் என்றும், லாகூரை விட்டுப்

3-வது பரிசு பெற்ற கதை

# பட்டாணியன்

யு.எஸ்.மேனன்

மொழிபெயர்ப்பு எஸ்.வி.எஸ்

மூலக் கதை : மலையாளம்

புறப்படவேண்டிய நிர்ப்பந்தம் ஏற்பட்டால் எப்பாடு பட்டாகிலும் இந்தக் கிளைக் காரியாலயத்தின் பண சம்பந்தமான கணக்கு விவரங்களை உடன் கொண்டுவர வேண்டும் என்றும் அந்தத் தந்தியில் கண்டிருந்தது.

எனக்கு என்ன செய்வது என்று தெரியவில்லை. எங்கள் லாகூர்க் காரியாலயம் முஸ்லிம்கள் வசிக்கும் பகுதியிலிருந்தது. அங்கு சென்று பைல்களைத் தேடுவது என்பது யமனையே வம்புச் சண்டைக்கு இழுப்பது போலாகும்.

ஆகவே, நான் போகாமல் இருந்து விட்டால் என்ன நேரும்......?

*

நான் இந்த வேலையில் இருபது வருஷமாக இருக்கிறேன். சாதாரண குமாஸ்தாவாக நுழைந்து இப்பொழுது ஒரு கிளைக் காரியாலயத்தின் தலைமை அதிகாரியாக இருக்கிறேன். நான் இந்த இருபது வருஷ காலம் உண்ட உப்புக்கு நன்றி செலுத்த வேண்டாமா?

இரவு பத்து மணிக்கு மேல் ஆகி விட்டது. என் மனைவியும் குழந்தையும் தூங்கிக் கொண்டிருந்தனர். நான் முழுவதும் இங்கும் அங்கும் ஓடியாடிய அலுப்பு அவர்களுக்கு.

என் குழந்தை, அந்தத் தூக்கத்திலும் பட்டு நூலில் செய்யப்பட்டிருந்த காய்ப் பொம்மையை மார்புடன் அணைத்துப் பிடித்துக் கொண்டிருந்தாள். ஜாதிக்காய்ப் பெட்டிகளையெல்லாம் சேர்த்துப்போட்டு ஒரு கட்டில் மாதிரி செய்திருந்தாள் என் மனைவி. அதில் ஒரு கிழிந்த கம்பளியை விரித்துப் போட்டு அடக்க ஒடுக்கமாகச் சுருண்டு படுத்திருந்தாள். அவளுக்குப் பக்கத்தில் துல்லியமான வெள்ளை பெட்ஷீட் அழகாக விரிக்கப்பட்டிருந்தது. அந்த இடம் எனக்காக ஏற்பட்டது!

நான் சில நிமிஷங்கள் அவர்களையே உற்றுப் பார்த்துக் கொண்டிருந்தேன். பிறகு மௌனமாக அவர்களிடமிருந்து விடைபெற்றுச் சென்றேன்.

ஒரு கணம் கூடத் தாமதிக்காமல், என் கோட்டுப் பைக்குள் மின்சார டார்ச்சு விளக்கையும் ஐந்து கண்களிருக்கும் ரிவால்வர் ஒன்றையும் திணித்துக் கொண்டு, 'காம்ப்' சைக்கிளில் எங்கள் தொழிற் சாலையை நோக்கி விரைந்தேன்.

பல தெருக்களில் நரிகள் என் பின்னால் வந்து துரத்தின. ஒரு தெருவின் திருப்பத்தில், தெருவுக்குக் குறுக்கே நீளமாக ஏதோ கிடந்தது. நான் சைக்கிளுடன் கீழே விழும்படியாகி விட்டது. பிறகு என்னைச் சமாளித்துக் கொண்டு எழுந்து



சின்று பையிலிருந்த 'டார்ச்சு' விளக்கை எடுத்துப் போட்டுப் பார்த்தேன்.

ஒரு அழகிய சீக்கியப் பெண்ணின் சவம் அது. அவள் உடலில் இன்னும் உஷ்ணம் இருந்தது. அவளை மானபங்கப் படுத்திய தோடு திருப்தி யடையாமல், அந்தக் கொலைகாரர்கள், அவள் மார்பகத்தை வேறு சிதைத்து விட்டுச் சென்றிருந்தனர். பயத்தில் திரு திருவென்று விழித்த அவள் கண்கள் விழித்த படியிருந்தது. ஒரு சொட்டுத் தண்ணீருக்காக ஏங்கிய அவள் வாய், இன்னும் திறந்தபடி யிருந்தது.

நான் மெள்ள அவள் கண்களின் இரப்பைகளை மூடினேன்; என் கைக்குட்டையினால் அவள் மானத்தை மூடினேன். பிறகு என் சைக்கிளைச் சரிப்படுத்திக் கொண்டு மேலே தொடர்ந்தேன்.

மாதாகோவில் மணி பதினொன்றடித்தது. நான் என் தொழிற்சாலையின் வாசலை யடைந்த போது. நான் சைக்கிளை விட்டு, சத்தமின்றி மெள்ள இறங்கினேன். அப்போது இடி முழக்கக் குரலில், "நில்! யார் அங்கே?" என்று சத்தம் கேட்டது. குரல் வந்த திசையைப் பார்த்தேன். வேறு யாருமில்லை; எங்கள் தொழிற்சாலையின் வாயில் காப்போன். அவன் துப்பாக்கியில் செருகியிருந்த கத்தி அந்த இரவிலும் மின்னியது. "சௌக்கிதார், நான்தான்!" என்று மெல்லிய குரலில் சொன்னேன்.

"ஸாஹேப்!" (எஜமான்!) என்று சொல்லிவிட்டு அடுத்த கணம் தன் கைத் துப்பாக்கியைத் தாழ்த்தி நிமிர்ந்து நின்று "ஸலாம் ஸாஹேப்!" என்று ராணுவ முறையில் வணக்கம் செலுத்தினான்.

"சௌக்கிதார்! சத்தப் படுத்தாமல் உடனே கதவைத் திற!" என்றேன்.

கதவைப் பூட்டியிருந்த பூட்டுக்குள் சாவியை நுழைத்துக் கொண்டே அவன் சொன்னான்: "மன்னிக்கவேணும், ஸாஹேப்! என்னால் சொல்லாமலிருக்க முடியவில்லை. நீங்கள் இப்பொழுது வந்தீர்களே, இதைப் போன்ற மடமை வேறு ஒன்றும் கிடையாது. சென்ற வாரமெல்லாம் குண்டர்கள் உங்களைத் தேடிக் கொண்டு பல தடவை வந்து போய் விட்டார்கள். இப்பொழுது கூட உங்கள் வரவை எதிர் நோக்கிக் கொண்டு வழியில் உட்கார்ந்திருக்கிறார்களோ, என்னவோ! திரும்பிப் போய் விடுங்கள்!"

"சௌக்கிதார்!"

"இல்லை. ஐயா! நான் சொல்வதைத் தாங்கள் தயவு செய்து கேட்கத்தான் வேண்டும். திரும்பிப் போய் விடுங்கள்! சீக்கிரம் போங்கள்! எசமானியம்மாளை நினையுங்கள்! குட்டி எசமானையும் சற்று நினைத்துப் பாருங்கள்."

அவன் கூறிய வார்த்தைகள் எனக்குப் பிடிக்கவில்லை; நான் பொறுமை இழந்து அடிக்கத் தொடங்கினேன். அந்தக் கோபத்தில், "சௌக்கிதார்! உன்னுடன் வாதம் செய்ய இதுவல்ல சமயம். எனக்குப் புத்திபுகட்ட உனக்குச் சம்பளம் கொடுக்கவில்லை. ஆபீஸிலிருந்து சில முக்கியமான தஸ்தாவேஜுகளை எனக்கு எடுத்துக் கொள்ள வேண்டும். நீ கதவைத் திறக்கப் போகிறாயா, இல்லையா?" என்று கேட்டேன்.

"சரி, ஐயா!" என்று சொல்லி விட்டு வாசற் கதவுகளைத் திறந்தான். என் கைகள் எல்லாம் நடுங்க, என் ஆபீஸ் அறைக் கதவை எப்படியோ திறந்தேன். என் கையிலிருந்த டார்ச்சு விளக்கின்



வெளிச்சத்தில் பரிசீலனை செய்து, முக்கியமான காகிதங்களைக் கட்டி, என் பைக்குள் திணித்தேன். அப்பொழுது அவன் ஓடிவந்து, "சாஹேப், நம்மை யாரோ காட்டிக் கொடுத்து விட்டார்கள். அபோக்கியர்கள் வருகிறார்கள்!" என்றான். நான் பார்த்தேன்! இருநூறு கஜ தூரத்தில் ஒரு கூட்டம், கையில் தீவர்த்திகள் ஏந்திக் கொண்டு, "பாகிஸ்தான் ஜிந்தாபாத்! ஹிந்துஸ்தான் முர்தாபாத்!" (பாகிஸ்தான் வாழ்க! ஹிந்துஸ்தான் அழிக!) என்று கூவிக் கொண்டு வந்தனர். 'சரி, இன்றைக்கு நாம் தொலைந்தோம்!' என்று தீர்மானித்து விட்டேன். விம்மதியுடன் தூங்கிய என் குழந்தையை நினைத்துக் கொண்டேன்; என் அருமை மனைவியை நினைத்துக் கொண்டேன். பிறகு என்னைப் படைத்த ஆண்டவனைச் சிந்திக்கத் தயாரானேன்!

நான் எங்கள் தொழிற்சாலை வாயில் காப்போனைப் பார்த்து, "நீ உண்ட உப்புக்கு நன்றியுள்ளவன் தானே?" என்று கேட்டேன்.

"ஸாஹேப்! நான் ஒரு பட்டாணியன். அது மட்டுமல்ல; நான் ஒரு பட்டாணியனுக்குப் பிறந்தவன்!"

"ரொம்ப நல்லது. இந்த தஸ்தாவேஜுக் கட்டைப் பத்திரமாக வைத்திருந்து, கலகங்கள் ஓய்ந்த பிறகு நமது டில்லித் தலைமைக் காரியாலயத்தில் சேர்ப்பித்து விட வேண்டும்" என்றேன்.

அவன் அந்தக் கட்டை வாங்கிக் கொண்டு, தன் நீண்ட கோட்டின் பைக்குள் வைத்துக் கொண்டு, "நான் ஒரு பட்டாணியன் பட்டாணியனுக்குப் பிறந்தவன்!" என்று மறுபடியும் சொல்லிவிட்டு என் சைக்கிளை ஆபீசுக்குள் கொண்டு வைத்துப் பூட்டினான். பிறகு சாவிக் கொத்தைத் தன் பையில் போட்டுக் கொண்டே, 'கார் ஷெட்'டுக்குச் சென்று தலையிலிருந்து பாதம் வரை மூடும் கறுப்பு முகமூடியைக் (புர்க்காவை) கொண்டு வந்தான். "சாஹேப், இதை அணிந்து கொண்டு, ரிவால்வரை என்னிடம் கொடுங்கள். சீக்கிரம்!" என்றான்.

ஒரு நிமிஷத்தில் எனக்குப் புர்க்காவை அணிவித்து, ரிவால்வரை தன் சட்டைப் பைக்குள் வைத்துக் கொண்டான். என் இதயம் படபடவென்று அடித்துக் கொண்டது. இந்த என் இதயத் துடிப்பை அவன் கேட்காமலிருக்க வேண்டுமே என்பதற்காக, "அப்துர் ரஹீம்! உனக்குக் கல்யாணமாக வில்லையே, பின் எப்படி உனக்கு இந்த பெண்கள் அணியும் அங்கி கிடைத்தது?" என்று கேட்டேன்.

"மன்னிக்க வேணும், சாஹேப்!" என்று சொன்னான். அப்போது அவனுடைய சிவப்பு தாடியினூடே ஒரு நாணம் கலந்த சிரிப்பு வெளிப் பட்டது. பத்து வருஷ காலமாக அவன் இங்கே இருக்கிறான். இத்தனை நாட்களில் இவன் ஒரு நாளாகிலும் சிரித்து நான் பார்த்தது கிடையாது. இன்று, சாவை எதிர் நோக்கிக் கொண்டிருக்கும் போது, இவன் சிரிக்கிறான்!

கொள்ளைக் கூட்டத்தினர் வாசலை அடைந்தனர். அப்துர் ரஹீம் கர்ஜித்தான்: "நில்! யாரங்கே வருவது?" "பாகிஸ்தான் ஜிந்தாபாத்!" என்று கொள்ளைக் கூட்டத்தினர் கோஷித்தனர்.



உடனே அப்துர், "ஸலா மாலீகும்!" என்று பதிலுக்குக் கூறித் தான் அவர்களுக்கு 'நல்வரவு' கூறுவதாகத் தெரிவித்துக் கொண்டான்.

கூட்டத்தின் தலைவனாகத் தோன்றிய இரத்த வெறிகொண்ட ஒரு இளைஞன், "அப்துர் ரஹிம், உன்னுடைய காபீர் (நாஸ்திக) எஜமான் இங்கே இருக்கிறாராமே! எங்கே இருக்கிறார்?" என்றான்.

"இங்கே இல்லையே, குலாம்! அந்த அயோக்கியனுக்குத் தான் இங்கு வர எப்படித் துணிச்சல் ஏற்படும்?" என்று சற்றும் தயங்காமல் அடித்து விட்டான். "ஆகா! அப்படியானால் இந்தப் புர்க்காக்குள் இருப்பது யார்?" என்று அந்த இளைஞன் கேட்டான். அவன் நான் அங்கே நிழலில் நிற்பதைப் பார்த்து விட்டான். என் முக மூடியைக் களையவும் பார்த்தான்.

அப்போது அப்துர் ரஹீம் "ஏய் பிசாசே!" என்று சிங்கம்போல் கர்ஜித்துத் தன் துப்பாக்கியின் பின் பகுதியால் அவன் கையைத் தட்டி விட்டான். "ஒரு முஸ்லிம் மாதின் பர்தாவைத் தொடச் சங்கோசப் படாத நீ ஏன்தான் பாக்கிஸ்தானில் இருக்கிறாயோ?" என்றான் அப்துர் ரஹீம் மேலும்.

இதைக் கேட்டதும் குலாமின் தோழர்கள் "சபாஷ்! சபாஷ்! உனக்கு வேண்டியதுதான் குலாம்! இதுவும் வேண்டும் உனக்கு, இன்னமும் வேண்டும்!" என்று சொல்லி உரக்கச் சிரித்தார்கள்.

அடிபட்ட கையைத் தடவிக் கொடுத்துக் கொண்டே, குலாம் கோபமாகக் கேட்டான்: "அப்துர் ரஹிம், அந்த முக மூடிக்குள் இருப்பது யார்?"

"என் மனைவி!" என்றான் அப்துர்.

"சத்தியம் செய்வாயா?

"ஓ, சத்தியம் செய்வேன்!"

"உன்னுடைய காபீர் எஜமான் இங்கு வரவில்லையா?"

"இல்லை!"

"அவர் சைக்கிளில் இந்தப் பக்கமாக விரைந்து வந்ததைப் பார்த்தவர்கள் இருக்கிறார்கள்!"

"அப்படியானால் அவர்களையே கேள்!"

"இந்தத் தொழிற்சாலைக்கு நெருப்பு வையுங்கள். அந்தக் காபீர் மகன் இங்கு இருந்தானாகில், அவனும் இத்துடன் எரிந்து சாகட்டும்!" என்றான். இந்தக் கட்டளை பிறந்ததும், கட்டிடத்தின்மேல் பெட்ரோல் ஊற்றி நெருப்பு வைக்கப் பட்டது. இதைக் கண்டு குதூகலமடைந்த அக் கும்பல், "பாக்கிஸ்தான் ஜிந்தாபாத்! ஹிந்துஸ்தான் முர்தாபாத்!" என்று கத்திக்கொண்டே சென்றார்கள்.

நான் உச்சந்தலையிலிருந்து உள்ளங்கால் வரை நடுங்கிக் கொண்டிருந்தேன். தகதக வென்று எங்கள் தொழிற்சாலை எரிந்து கொண்டிருந்தது. அதன் ஒளியில் என் பட்டாணியனின் முகத்தைப் பார்த்தேன். சாதாரணமாகச் சிவந்து தோன்றும் அவன் முகம் சாம்பல் நிறமாக இருந்தது. அவன் குரல் மென்மை பொருந்தியிருந்தது. நிதானமாகச் சொன்னான்: "ஸாஹேப், இந்த முஸ்லிம்கள் வாழும் இடத்தை விட்டு உங்களைச் சௌகரியமாக வெளியேற்றி விடுகிறேன். பிறகு, அல்லாவீது ஆணையாகக் கேட்டுக்கொள்ளுகிறேன், மறுபடியும் இந்தப் பக்கம் வந்து விடாதீர்கள்!"

அவன் என் கையைப் பற்றிக்கொண்டு நடந்தான். அவனுடைய இரும்புப்பிடியில் என் கை வெந்து போய் விட்டது. இப்பொழுது நாங்கள் ஹிந்துக்கள் வாழும் இடத்துக்கு வந்து விட்டோம். திடீர் என்று ஒரு பெரிய மோட்டார் லாரி, அந்தத் தெருவில் திரும்பி எங்கள் முன் நின்றது. அதிலிருந்து, "ஹிந்துஸ்தான் ஜிந்தாபாத்! பாக்கிஸ்தான் முர்தாபாத்!!" என்ற கோஷங்கள் எழும்பின. கடோத்கஜன் போல் தோற்றமளித்த ஐந்தாறு சீக்கியர்கள் வெளிப்பட்



டார்கள். "காதலர்கள் உலாவப் புறப்பட்டு விட்டார்களோ!" என்று சொல்லிச் 'சிரித்துக்கொண்டே, ஒருவன் என் முகத்திரையைக் கிழித்தெறிந்தான்.



அடுத்த விநாடி "என்ன! மேனன் சாஹேப்!" என்று ஆச்சரியப்பட்டுக் கேட்டான் அவன் என் முகத்தைப் பார்த்ததும். நாங்கள் ஒருவரையொருவர் நன்கு அறிவோம். அவர் ஆச்சரியத்துடன் "மேனன் சாஹேப்! இது என்ன கூத்து?" என்று கேட்டார்.

"சர்தார்ஜி! இவன் எங்கள் தொழிற்சாலையின் காவல்காரன். இப்பொழுதுதான், கொஞ்ச நாழிகைக்கு முன் முஸ்லிம் குண்டர்களிடமிருந்து என்னைக் காப்பாற்றினன். அவனை விட்டு விடுங்கள்!"

இதைக் கேட்டுவிட்டு, "ஹஹ்ஹா! ஹஹ்ஹா" என்று அவர் பயங்கரப் பேய்ச் சிரிப்புச் சிரித்தார். "நான் இந்த முஸ்லிமுக்குத் தொந்தரவு விளைக்கக் கூடாது இல்லையா? கொஞ்சம் இந்த லாரிக்குள் பாருங்கள்" என்றார்.

நான் பார்த்தேன். பத்துப் பதினைந்து முஸ்லிம் ஆடவர், பெண்டிர், குழந்தைகள் கட்டிப் போடப் பட்டிருந்தனர். கசாப்புக் கடைக்கு எடுத்துச் செல்லப் படும் ஆடுகள் போல் அவர்கள் பயத்தில் விழித்த விழிப்பு, அந்தக் கண்கள், இன்னும் எனக்கு மறக்கவில்லை.

"நாங்கள் இவர்களை விருந்துண்ணப் போகிறோம்" என்று சொல்லி முதல் 'சர்தார்ஜி' சிரித்தார். பிறகு, கோபத்துடன் அப்துர் ரஹீம் இருந்த பக்கம் திரும்பி அவன் கழுத்தைப் பிடித்தார்.

நான் கைகளைக் கூப்பி, "சர்தார்ஜி! அவன் முஸ்லிம் தான். ஆனால் அவன், ஒரு ஹிந்துவின் உயிரைக் காப்பாற்றியிருக்கிறான் என்பதை மறந்துவிடக் கூடாது" என்றேன்.

"மறப்பதா? ஓ! இல்லை, நாங்கள் மறப்பதில்லை மிஸ்டர் மேனன்! நாங்கள் மறப்பதுமில்லை, மன்னிப்பதுமில்லை! இருபது வருஷ காலம், நான் ஒரு முஸ்லிம் அநாதைச் சிறுவனை வளர்த்தேன். அதற்குப் பலன், நான் வீட்டிலில்லாதபோது, அவன் தன் தோழர்களை என் வீட்டுக்கு அழைத்து வந்து என் மனைவியையும் மூன்று குழந்தைகளையும் இரக்கமின்றிக் கொன்று விட்டான். நான் இன்னும் எங்கள் வீட்டிலிருந்து அந்தச் சவங்களை எடுக்கவில்லை......முடியாது, மிஸ்டர் மேனன்! இந்த யுத்தத்தில் விதி என்ன தெரியுமா? இரத்தத்துக்கு இரத்தம்! உயிருக்கு உயிர்!" இப்படிக் கூறியபோது அவர் உடல் எல்லாம் பதறியது.

நான் அப்துர் ரஹீமுக்காக மறுபடியும் "தயவுசெய்து......" என்று இறைஞ்சத் தொடங்கினேன். அப்போது அப்துர் ரஹீம் குறுக்கிட்டு, "ஸாஹேப், இதைப் பற்றிக் கவலைப் படாதீர்கள். இந்த அப்துர் ரஹீம் ஒரு பட்டாணியன்! அது மட்டுமல்ல, ஒரு பட்டாணியனுக்குப் பிறந்தவன். என் தந்தை என்றைக்கும் சாவைக் கண்டு பயந்ததில்லை" என்று சொல்லிவிட்டு, அவன் தன் கோட்டைச் சரிப்படுத்திக் கொண்டான். தலைப்பாகையைச் சரி செய்து கொண்டான்! தன் ஆறடி உயரத்தை வளைக்காமல் நிமிர்த்தி நிறுத்தி எனக்கு ராணுவ முறைப்படி ஸல்யூட் அடித்துவிட்டு, நான் கொடுத்த ஆபீஸ் காகிதக் கட்டை என்னிடமே திருப்பிக் கொடுத்தான். பிறகு ஒரு கொடியில் அவன் பின்னால் குதித்து, கையில் ரிவால்வரைப் பிடித்துக்கொண்டு, "காபிர்களை, இந்தாருங்கள்! வாங்கிக் கொள்ளுங்கள்!" என்று சொல்லிச் சுட்டான். ஒரு சிக்கியன் விழுந்தான். இன்னொரு சத்தம் கேட்டது; இன்னொரு சிக்கியன் விழுந்தான். எதிர்ப்புறத்திலிருந்து ஒரே சமயத்தில் மூன்று குண்டுகள் பாய்ந்தன. பட்டாணியன், கையில் பிடித்திருந்த ரிவால்வர் விழுந்தது. அவன் உயிர் போய்க் கொண்டிருந்தது. அந்தக் கணத்தில் அவன் தன் கையைத் தூக்க முடியுமளவுக்குத் தூக்கி, அவனால் பலமாகக் கத்த முடியுமளவுக்கு. "பாகிஸ்தான் ஜிந்தாபாத்!" என்று கத்தினன்.

# புத்திசாலி!

— சாமா



மோகன் படிப்பில் அவ்வளவு கெட்டிக்காரன் இல்லை. வீட்டிலும் சரி, பள்ளிக்கூடத்திலும் சரி எல்லோரும் அவனை முட்டாள் என்று அழைக்க ஆரம்பித்தனர். முட்டாள் என்று ஒருவன் பெயர் எடுக்க ஆரம்பித்து விட்டால் அப்புறம் அது ஸ்திரமாகி விடுகிறது.

இதற்கேற்றாற்போல் அவன் எவ்வளவு சிரமப்பட்டுப் படித்தாலும் அவனுக்கு எதுவுமே மூளையில் ஏறுவதில்லை. அவன் தகப்பனார் எவ்வளவோ சிரமப்பட்டு அவனுக்குப் பாடங்களைச் சொல்லி வைத்தும் பிரயோஜனமில்லாமல் போய்விட்டது. கடைசியில் முட்டாள் என்ற பெயர்தான் ஊர்ஜிதமாயிற்று. உபாத்தியாயரிடமும் பையன்களிடமும் தான் எப்படியாவது புத்திசாலி என்று பெயர் வாங்க வேண்டும் என்று மோகன் ரொம்ப சிரமப்பட்டான்.



ஒரு நாள் மோகன் பள்ளியிலிருந்து தனியாக மன வருத்தத்துடன் வீட்டுக்கு வந்து கொண்டிருந்தான். அப்பொழுது அவன் பக்கத்தில் யாரோ ஒரு பெரியவர் வந்து "அப்பா மோகன்! ஏன் அழுகிறாய்?" என்றார். மோகன் உடனே "என்னை எல்லோரும் முட்டாள் என்கிறார்கள்" என்று சொல்லி மேலே பேச முடியாமல் ஹோவென்று அழுது விட்டான்.

அந்தப் பெரியவருக்கு அவனைப் பார்க்க ரொம்பப் பாவமாக இருந்தது. "அழாதேயப்பா! நான் சொல்லுகிறபடி செய். உன் வீட்டிற்கு எதிரே இருக்கும் பெரிய கோவில் மண்டபத்திற்கு இன்று இரவு போய்க் கடவுளை வேண்டிக் கொண்டு, உன்னால் முடிந்த மட்டும் இரைந்து 'மோகன், நீ மகா புத்திசாலி' என்று சொல்லு. உடனே ஒரு குரல் 'மோகன், நீ மகா புத்திசாலி' என்று உன்னைச் சொல்லும். பிறகு படிப்பில் நீ மகா நிபுணனாக ஆகிவிடுவாய். இதை யாரிடமும் சொல்லாதே" என்று கூறிவிட்டுப் போய்விட்டார். மோகனின் முகம்மலர்ந்தது.

அன்று இரவு அவன் கோவில் மண்டபத்துக்குப் போய் "மோகன், நீ மகா புத்திசாலி!" என்றான். திருப்பி, 'மோகன் நீ மகா புத்திசாலி!' என்று ஒரு பெரிய குரல் கேட்டது. மோகனுக்குச் சந்தோஷம் தாங்கவில்லை. வீட்டுக்கு ஓடி விளக்கேற்றி வைத்து விட்டுப் படிக்க ஆரம்பித்தான். ஒரு தரம் படித்தவுடனேயே அவனுக்கு மனப்பாடமாகி விட்டது. மோகன் புத்திசாலியாகவே ஆகிவிட்டான். திடீரென்று இப்படித் தங்கள் மகன் புத்திசாலியானதைக் கண்டு தாயும் தகப்பனும் அளவு கடந்த சந்தோஷமடைந்தார்கள். மோகனும் பள்ளிக்கூடத்தில் முதலில் தேற ஆரம்பித்து விட்டான். எல்லோரும் அவனைப் புத்திசாலி என்றே அழைத்தனர்.





• மோகனுக்கு. தான் மண்டபத்தில் கேட்டது எதிரொலி என்று தெரியாவிட்டால் என்ன? அவன் இப்போது உண்மையிலேயே புத்திசாலி.




## 8. பூதம் பணிந்தது!

மதனன் மண்டபம் அமைதியாக இருந்தது. அரசர் மந்திரி பிரதானிகள் முதலியோர் மௌனமாக நின்று கொண்டிருந்தனர். அவர்கள் ஒருவரை யொருவர் மிகுந்த ஏமாற்றத்துடன் பார்த்துக் கொண்டனர். மதனன் மண்டபத்தின் அழகிய தூண்களைப் பார்த்தனர். அதிலிருந்த அற்புத சித்திரங்களின் அழகைப் பார்த்தனர். பொற்பாவை ஒன்று சோகமே உருவமாக நின்று கொண்டிருப்பது போலிருந்த அமுதவல்லியைப் பார்த்தனர். அவள் அழகிய கண்களில் முத்துப் போல் உருண்டு வந்து நின்ற கண்ணீர்த் துளியைப் பார்த்தனர். லட்சிய புருஷனைப் போல் வீராவேசமாக நின்று கொண்டிருந்த வீரசேனனைக் கோபமாகப் பார்த்தனர். அவன் களையான முகத்தில் துள்ளிய வீர தேஜஸைக் கண்டனர். கோபம் தணிந்து செய்வதறியாது திகைத்தனர். சற்று முன்பு இந்திர சபை போல விளங்கிய மதனன் மண்டபம் சோகம் கலந்த மௌன மண்டபமாக ஒளியிழந்து விளங்கியது.

அந்த மௌனத்தைக் கிழித்துக் கொண்டு அமைதியைப் பிளந்து கொண்டு வீரசேனன் பேசினான். அரசரும் அமுதவல்லியும் அங்கு கூடியிருந்த மந்திரி பிரதானிகள் எல்லோரும் ஆவலோடு அவன் முகத்தைப் பார்த்தனர்.

"அரசே! நான் நாடற்றவன். என் நாடு எதிரிகள் கையில் சிக்கிக் கொண்டிருக்கிறது. என் தந்தையார்,—அவர் தான் மார்த்தாண்ட மன்னர் எதிரிகளின் சூழ்ச்சியால் கொல்லப்பட்டார். மார்த்தாண்ட புரத்து மக்கள் அடிமைகளாய், விலங்குகளாய் வாழுகின்றனர். அவர்களுடைய அடிமை விலங்கை அறுத்தெறிய வேண்டும். மார்த்தாண்ட புரத்தில் சுதந்திரக் கொடி பறக்க வேண்டும். அதற்காக என் தந்தை மார்த்தாண்ட மன்னர் கனவில் தோன்றி எனக்கு ஒரு கட்டளை யிட்டிருக்கிறார். அந்தக் கட்டளையை, என் கடமையை நிறைவேற்றி விட்டுத்தான் அமுதவல்லியைக் கல்யாணம் செய்து கொள்ளுவேன். அதற்காக நீங்கள் எனக்கு ஒரு உதவி செய்ய வேண்டும்" என்று அமுதவல்லியின் தந்தையைப் பார்த்துக் கேட்டான் வீரசேனன்.

இதைக் கேட்டதும் அரசர் முகம் மலர்ந்தது. அமுதவல்லிக்கு ஆனந்தம் தாங்கவில்லை. ராஜ சபையினர் மிகுந்த குதூகலத்துடன் "வீரசேனன் வாழ்க!" "அரசர் வாழ்க!" என்று கோஷித்தனர்.

அரசர் வீரசேனன் முன் வந்து, "வீரசேனா! என்னால் ஆக வேண்டிய உதவி எதுவாக இருந்தாலும் கேள். கட்டாயம் செய்கிறேன்" என்றார்.

வீரசேனன் தான் சுரங்கத்துக்குள் போனதையும் அங்கு சர்வ லட்சணமும் பொருந்திய ராஜகுமாரியுடன் வரவேண்டும் என்று எழுதியிருந்ததையும் அந்த ராஜகுமாரியைத் தேடிக் கொண்டு வந்ததையும் விவரமாக எடுத்துக் கூறி "முதலில் நான் அமுதவல்லியுடன் சென்று சுரங்கத்திலிருக்கும் செல்வங்களை அடையவும் என் தாய் நாட்டை மீட்கவும் என் தந்தையின் கட்டளையை நிறைவேற்றவும் தாங்கள் உதவி செய்ய வேண்டும்" என்று கேட்டுக் கொண்டான்.

அரசர் சற்று யோசித்தார். "வீரசேனா! இந்த உதவிதானா? கட்டாயம் செய்கிறேன். நீ அமுதவல்லியுடன் முதலில் போ. போய்ச் சுரங்கத்திற்குள் இருக்கும் செல்வங்களை எடுத்துக் கொண்டு மார்த்தாண்ட புரத்து எல்லைக்கு வெளியிலிருக்கும் ஐயனார்

கோயிலுக்கு வந்துவிடு. அங்கு நான் எனது படையுடன் காத்துக்கொண்டிருக்கிறேன். மேலே ஆக வேண்டியதைப் பிறகு பார்த்துக் கொள்ளலாம்" என்றார்.

வீரசேனனுக்குச் சந்தோஷம் தாங்க முடியவில்லை. தன்னுடைய அன்பையும் நன்றியையும் அரசருக்குத் தெரிவித்து விட்டு அமுதவல்லியை அழைத்துக் கொண்டு கிளம்பினான். கிளம்புவதற்கு முன் ராஜசபையில் கூடியிருந்த எல்லாருக்கும் வணக்கம் செலுத்தினான். அரண்மனைக்கு வெளியில் வந்தான். அங்கு அவனுக்காகவே காத்திருந்த வெள்ளைக் குதிரையின் மீது அமுதவல்லியை ஏற்றி விட்டுச் சட்டென்று தானும் தாவி ஏறிக் கொண்டான். அரண்மனை வாசலில் நின்று கொண்டிருந்த அரசருக்குத் தன் வலது கையை உயர்த்தி மரியாதை செய்தான். குதிரையின் கடிவாளத்தைப் பிடித்து ஒரு சொடுக்குச் சொடுக்கினான். குதிரை கிளம்பியது. முதலில் தனக்கு உதவி புரிந்த பாட்டியிடம் சென்று அவளுக்குத் தன் நன்றியைத் தெரிவித்தான். அமுதவல்லி தன் அன்புக்கு அறிகுறியாக அவளுக்கு ஒரு முத்துமாலை பரிசளித்தாள்.

பிறகு பாட்டியிடம் விடை பெற்றுக் கொண்டு கிளம்பினர். குதிரை வாயு வேக மனோ வேகமாகப் பறந்தது. அந்த வேகத்தைத் தாங்க முடியாத அமுதவல்லி வீரசேனனை இறுக அணைத்துப் பிடித்துக் கொண்டாள்.

மார்த்தாண்டபுரம் பூதம் காத்த சுரங்க மாளிகையில் வீரசேனனின் தாய் தேவியின் முன் மண்டியிட்டபடி அமர்ந்திருக்கிறாள். அவள் கண்களில் கண்ணீர் பெருகி வழிகிறது. அதோ அவள் வாயைத் திறந்து ஏதோ சொல்லுகிறாள். 'தாயே! வீரசேனன் எனக்கு ஒரே மகன். அவனுக்குப் பக்கத் துணையிருந்து காப்பாற்ற வேண்டும்" என்று சொல்லிக் கை கூப்பி வணங்கி எழுந்தாள்.

வீரசேனன் அமுதவல்லியுடன் அந்த அறைக்குள் நுழைந்தான்.

'அம்மா! தேவி துணை புரிந்தாள். உங்கள் அன்பு உதவிபுரிந்தது. சர்வ லட்சணமும் பொருந்திய ராஜகுமாரியை அழைத்து வந்து விட்டேன்" என்று சொல்லிக் கொண்டே அவள் பாதத்தில் விழுந்து வணங்கினான்.

அமுதவல்லியும் உணர்ச்சி மிகுதியால் அவள் காலில் விழுந்து நமஸ்கரித்தாள்.

வீரசேனன் தாயாருக்கு உணர்ச்சி பெருக்கால் வாய் பேச முடியவில்லை. கண்களில் ஆனந்தபாஷ்பம் வழிய உள்ளத்தில் மகிழ்ச்சி பொங்க வீரசேனனையும் அமுதவல்லியையும் வாரி எடுத்து உச்சி முகந்து ஆசீர்வதித்தாள்.

"அம்மா! அமுதவல்லியுடன் நான் சுரங்கத்துக்குள் போய்வருகிறேன்" என்று சொல்லி விடைபெற்றுக் கொண்டான்.

வீரசேனன் அமுதவல்லியுடன் சுரங்கத்துக்குச் சென்றான். அமுதவல்லி சுரங்கத்திற்குள் இருந்த யாளிமுக வாசலையும் யந்திரப்புலியையும் பொய்ப் பாலத்தையும்






மாய மாளிகையையும் பார்த்துப் பயமும் வியப்பும் திகைப்பும் அடைந்த வண்ணம் வீரசேனனுடன் சென்றாள்.

வீரசேனன் ஏதோ வெறி பிடித்தவன் மாதிரி சென்று கொண்டிருந்தான். கடைசியில் பூத உருவ மண்டபத்துக்கு வந்து நின்றான். சுற்றுமுற்றும் பார்த்தான். தன் தந்தையின் சிலை அருகில் சென்றான். "அமுதவல்லி! இவர்தான் என் தந்தை" என்று சொன்னான். பிறகு அந்தச் சிலையின் முன் விழுந்து வணங்கினான். அமுதவல்லியும் வணங்கினாள். வீரசேனன் சிலை அருகில் சென்றான். அந்தச் சிலையின் இடையில் நிஜமான போர்வாள் ஒன்று இருந்தது. அந்தப் போர் வாளை எடுத்துத் தன் இடையில் கட்டிக் கொண்டான். அமுதவல்லியின் கையைக் கெட்டியாகப் பிடித்துக் கொண்டான். நேரே அந்த பூத உருவத்துக்கு எதிரில் வந்தான்.

ஒரு கண நேரம்தான் அந்த இடத்தில் நின்றிருப்பான். ஏதோ பெரிய பயங்கரப் புயல் வீசுவது போல 'ஹோ' என்ற பேரிரைச்சல் கேட்டது. அந்த மண்டபமே ஆடி விழுந்துவிடுவது போல இருந்தது. அந்தப் பயங்கர பூத உருவச் சிலை மெதுவாகத் திரும்பியது. அந்த இடத்தில் இன்னும் கீழ் நோக்கிச் செல்லுவதற்கு வசதியான படிகள் இருந்தன. அமுதவல்லியின் உடல் பயத்தால் நடுங்கிக் கொண்டிருந்தது. வீரசேனன் அவளை அணைத்துப் பிடித்துக் கொண்டான். அந்தப் படியில் இறங்குவதற்கு அவனுக்கும் கொஞ்சம் பயமாகவே இருந்தது.

"வீரசேனா! என்ன யோசிக்கிறாய்? உன் இடையில் இருக்கும் வாள் அபார சக்தி வாய்ந்தது. அதை எடுத்துக் கையில் பிடித்துக் கொண்டு சுரங்கத்துக்குள் இறங்கு" என்று அவனுடைய உள் உணர்ச்சி அவனைத் தூண்டியது.

வீரசேனன் இடையிலிருந்த வாளை உருவிக் கையில் பிடித்துக் கொண்டான். இன்னொரு கையால் அமுதவல்லியை அணைத்துக் கொண்டான். படியில் மெதுவாகக் காலை ஊன்றி இறங்கினான். அமுதவல்லி "ஆ!" என்று அலறினாள். வீரசேனன் திடுக்கிட்டான். பிறகு அவளைத் தேற்றி



மூன்று காற்றாடிகளின் நூல்களும் சிக்கிக் கிடக்கின்றன. ஒவ்வொருவரின் நூலின் மேலேயே விரல் வைத்து அவரவர்கள் காற்றாடி எது என்று கண்டு பிடியுங்கள்.

விட்டுப் பார்த்தான். ஒரு பெரிய பாம்பு படுத்துக் கிடப்பது போல அந்தப் படியின் கைப் பிடியைச் செய்திருந்தனர். அதைப் பார்த்துத்தான் அமுதவல்லி பயந்து விட்டாள்.

அந்தப்படியில் கொஞ்ச தூரம் இறங்கிச் சென்றதும் 'டும், டும்' என்று பயங்கரச் சத்தம் கேட்டது. ஒரு வாசற்படி ஒன்று தெரிந்தது. அதற்கு இரு பக்கத்திலும் துவார பாலகர்கள் போல இரண்டு பூத கணங்களின் சிலைகள் இருந்தன. அதனுடைய ஒரு கையில் அணையாத தீப் பந்தம் ஒன்று எரிந்து கொண்டிருந்தது. வேறொரு கையில் ஆடு மாடுகளை பலியிடுவதற்கு உபயோகிப்பார்களே அது போன்ற கொடுவாள் ஒன்றைத் தூக்கிப் பிடித்திருந்தது. அந்தப் பயங்கர ராட்சஸ உருவத்தைப் பார்த்து எப்படித்தான் வீரசேனன் பயப் படாமல் சென்றானோ!

கடைசிப் படிக்கு வந்ததும் அங்கு பயங்கரமாக நாக்கை நீட்டிக் கொண்டிருந்த பாம்பின் தலையில் பயப்படாமல் காலை ஊன்றி நின்றான். கையிலிருந்த கத்தியைத் தூக்கிப் பிடித்து அண்ணாந்து பார்த்தான்.

'ஹைஹ்ஹா!' 'ஹைஹ்ஹா!' 'ஹைஹ்ஹா!' என்று அந்தச் சுரங்கமே நடுங்கும்படி இடியோசை போலப் பயங்கரமாகச் சிரித்துக்கொண்டு ஒரு பூதம் நின்று கொண்டிருந்தது. அந்தச் சிரிப்புச் சத்தத்தைக் கேட்டு வீரசேனன் நடுநடுங்கிவிட்டான். அமுதவல்லி வாசல் அருகிலேயே அசைவற்ற சிலை போல நின்று விட்டாள்.

வீரசேனன் தன் தைரியத்தை எல்லாம் வரவழைத்துக் கொண்டு கண்களை அகல விழித்துப் பார்த்தான். பொற்குடங்களைச் சுற்றிக் கொண்டு ஒரு பயங்கர சர்ப்பம் படமெடுத்துக் கொண்டிருந்தது அந்தப் பொற் குடங்களில் நவரத்னங்கள் குவித்து வைத்திருந்தன. அங்கு ஒரு உடைவாள் இருந்தது. அத்துடன் இன்னும் ஏராளமான தங்க நாணயங்கள் வேறு குவிந்து கிடந்தன. அதற்கு மேலே தான் பயங்கரமாகச் சிரித்த அந்த பூதம் தன் கோர உருவத்துடன் கூறிய கைகளுடன் ஒருதாய் குழந்தையைக் காப்பாற்றுவது போல அந்தப் பொற் குடங்களையும் செல்வத்தையும் காத்துக் கொண்டிருந்தது. இரு பக்கங்களிலும் சிவப்பு நிறப் பாம்புகளும், மண்டை ஓட்டினாலான குளோபர் விளக்குகளும் பயங்கரத் தோற்றத்துடன் தொங்கிக் கொண்டிருந்தன.

வீரசேனன் தூக்கிப் பிடித்த கத்தியுடன் அந்தப் பொற்குடத்தை நெருங்கினான். 'புஸ்' என்று சீறும் சத்தம் கேட்டது. 'சடக்'கென்று நின்றான்.

நாக சர்ப்பம் ஒன்று படமெடுத்துக் கொண்டு அவனைக் கடிக்க வந்தது. அதை லட்சியம் செய்யாமல் தன்னுடைய வாளால் ஒரே வெட்டில் வெட்டிக் கொன்றான். மீண்டும் 'உஸ்...ஸ்...ஸ்' என்று பயங்கரமாகச் சீறும் சத்தம் கேட்டது. நிமிர்ந்து பார்த்தான். மலைபோலிருந்த அந்தப் பூதம் அவனை நோக்கி மெதுவாக வந்தது. வீரசேனன் சற்றும் பயப்படாமல் அந்தப் பயங்கரப் பூதத்தை உற்றுப் பார்த்தான்.

"ஏ, நரனே! இந்தப் பொற்குடங்களைத் தொட்டால் உன்னை நசுக்கிக் கொன்று விடுவேன்" என்று கூறிக் கொண்டே அவன் கழுத்தைப் பிடித்து நெரிக்கத் தன் கூறிய நகங்களையுடைய கைகளை நீட்டியது.

வீரசேனன் ஆவேசம் வந்தவன்போலத் தன் பலம் அத்தனையும் உபயோகப் படுத்தித் தன் கழுத்தை நெரிக்க வந்த பூதத்தின் கையை வெட்டினான். அடுத்த கணம் பூமியே பிளந்து விடுவது போல் 'படார்' என்று ஒரு சத்தம் கேட்டது. அவன் கைவாள் இரண்டாக முறிந்து விட்டது. மண்டபம் முழுவதும் ஒரே புகை மயமாக இருந்தது. புகை அடங்கியதும் வீரசேனன் கண்களைத் துடைத்துக் கொண்டு பார்த்தான். அந்தப் பயங்கரப் பூதம் பணிந்து தன் காலடியில் கிடப்பதைக் கண்டான். அடுத்த கணம் அந்தப் பயங்கர பூத உருவம் மறைந்தது. அழகிய பெண் ஒருத்தி அவன் எதிரே கைகூப்பி நின்று கொண்டிருந்தாள். (தொடரும்)




( சென்ற வாரத் தொடர்ச்சி )

இந்தச் சிந்தனை எழுந்ததும் என் உடல் தளர்ந்தது; நரம்புகள் தளர்வுற்றன. அப்புறம் நானே மறுபடியும் சிந்தனைச் சிதர்களைத் தட்டி விட்டேன். "சீ! குழந்தைகள் தன் தாயாரைப் பற்றி இப்படிக் கீழ்த்தரமாகக் கற்பனை செய்யுமா! ஆனால் இன்றைய நாடகத்துக்குத் தலை கால் புரியவே யில்லையே! குழந்தையின் வாயை இவள் இப்படிப் பொத்துவானேன்!" மறுபடியும் இம்மாதிரிச் சந்தேகங்கள் என் மனத்தில் துளிர் விட்டன.

இதற்குள் என் பெண் குழந்தை, "அப்பா! அம்மா...... வந்து உன்னைப் பார்க்க யாரோ வந்திருந்தார். அம்மா வந்து......" என்றாள். அவள் வாயிலிருந்து வார்த்தைகளே வெளிவர வில்லை. அதற்குள் கமலா, "இந்தாடி! பேசாமல் இரு!" என்று அதட்டி வாயைப் பொத்த முயன்றாள். என் சந்தேகங்கள் மறுபடியும் படம் எடுத்து ஆட ஆரம்பித்தன; கண்களெதிரே பேய் நடனம் புரியவும் தொடங்கின.

'உன் சந்தேகம் உண்மையாகத்தான் இருக்க வேண்டும்' என்று என் காதுகளில் யாரோ சொன்னது போலிருந்தது. அவ்வளவுதான்; அடுத்த கணம் காதுகளை என்ஜின் ஊதுவது போன்ற சத்தம் துளைக்கத் தொடங்கியது. ஆயிரம் தேள்கள் ஏக காலத்தில் மூளையிலே கொட்டி விட்டது போலத் துடித்தேன்.

ரெயில் வண்டி ஓடத் தொடங்கியது. வண்டிகள், மோட்டார்கள், கடைவீதி, சந்து, தெரு, வீடு, சுவர், கண்ணாடி, கடிகாரம், காலண்டர், கடலில் மிதக்கும் கப்பல்கள் எல்லாமே ஆடத் தொடங்கின. பெரிய பூகம்பமே ஏற்பட்டு விட்டதுபோலத் தோன்றியது. அடுத்த நிமிஷம், வீடு, கடிகாரம், பெட்டிகள் எல்லாம் 'படபட'வென்று விழுந்து விட்டன. அப்பாடா! — நான் தலையை இறுகப் பிடித்துக் கொண்டேன்.

அதற்குள் யாரோ, "உனக்கு என்ன பைத்தியம் கியித்தியம் பிடித்து விட்டதா! உனக்குக் கமலாவைத் தெரியாது! இரவு — பகல் இருபத்தி நாலு மணி நேரமும் குழந்தைகளிடத்திலும் குடும்பக் காரியங்களிடத்திலும் உழன்று கொண்டிருக்கும் அவளுடைய மூளையில் இந்தமாதிரித் தீய நோக்கங்களுக்கெல்லாம் இடம் ஏது! அவளுக்கு விஷம் அருந்தக்கூட நேரம் இல்லையே, அப்பா! அவள் ஏதும் அறியாத சின்னப் பெண்ணு! — என்ன பாவக் கற்பனைகள்!" என்று என்னை நிந்திக்கத் தொடங்கினார்கள்.

பிறகுதான் பழையபடி கப்பல்கள் கடலில் நேராக மிதக்கத் தொடங்கின. கடிகாரம் சுவற்றில் சரியாகப் பொருத்தப் பட்டது. தெருவில் நடக்கும் ஜனங்களும் இயல்பாக நடக்க ஆரம்பித்தனர்.

இதற்குள் பெண் 'ஸ்பிரிங்'கைப்போலத் துள்ளிக் குதித்து, "அம்மா கன்னத்தைக் கரைத்து விட்டாள், அப்பா!" என்றாள். சட்டென்று கமலா அவள் தாடையில் ஒரு தட்டுத் தட்டினாள். நான் கற்பனையில் ஆழ்ந்தேன். யாராவது வந்திருப்பான். ஏதாவது நடந்திருக்கும். பெண் வாயைத்திறந்திருப்பாள். அதற்காக அவள் கன்னத்தைப் பிடித்து நிமிட்டிக் கரைத்திருப்பாள் என்று நிர்மாணித்தேன். — அம்மா கொடுத்த அடியை வாங்கிக் கொண்டு சிறிது நேரம் வரை அழுதுவிட்டுப் பெண் தூங்கி விட்டாள்.

நான் படுக்கையில் போய் உட்கார்ந்து கொண்டு, "கமலா!" என்றேன். என் உள்ளத்திலே சொல்ல முடியாத வருத்தம் உண்டாயிற்று. என் குரலே மாறி விட்டது. என் உள்ளத்து உணர்ச்சிகள் என் கண்களின் வெளியே பாய்ந்திருக்க வேண்டும். என் ஒவ்வொரு அவயவமும், மூக்கு-நாக்கு உள்பட எல்லாம் ஒரே ஆட்டமாக ஆடின. கமலா கலகலவென்று சிரிக்க நினைத்தாள் என்று தோன்றியது. ஆனால் அவள் வந்த சிரிப்பை அடக்கிக்கொண்டு தலையணையில் முகத்தை மறைத்துக்கொண்டு விசித்திரமாக அபிநயம் பிடித்தாள். அவள் அழுது கொண்டிருந்தாளா அல்லது சிரித்துக் கொண்டிருந்தாளா என்று என்னால் சொல்ல முடியாது. நான் வியப்பில் ஆழ்ந்தேன். எனக்குக் கமலாவின் மேல்

சந்தேகம்தானா, இல்லையா என்பதுகூடச் சரியாகத் தெரியவில்லை. என் மூளை அவ்வளவு குழம்பிப் போயிருந்தது. யாரோ ஆண் பிள்ளை வீட்டுக்குள் வந்திருக்கிறான். ஏதோ நடந்திருக்கிறது — இதை நினைத்த மாத்திரத்திலேயே என் உடல் நடுங்கத் தொடங்கியது. அட! மறுபடியும் இந்தப் பாழும் சந்தேகம் நம்மை ஆட்கொள்ளப் பார்க்கிறதே!—என்னுடைய முட்டாள்தனத்தை எண்ணி என்னை நானே கடிந்து கொண்டேன்.

கடைசியில் அவள் எழுந்து தன் அம்பு போன்ற கூரிய பார்வையினால் என்னைப் பார்த்து, "இவ்வளவு சொல்லியும் நீங்கள் ஏன் நேரம் கழித்து வந்தீர்கள்!" என்று கேட்டாள்.

"வராவிட்டால் உலகம் உருண்டுவிடுமோ!" என்று நான் அனாவசியமாகக் கோபத்தை வரவழைத்துக் கொண்டு கேட்டேன்.

"என்ன! உலகம் உருண்டுவிடுமா என்று தானே கேட்கிறீர்கள்! உருண்டுதான் விடும். உலகம் உருண்டைதானே! உருளாமல் என்ன செய்யும்!" என்று 'கலகல'வென்று சிரித்தவாறே அவள் கேட்டாள். மழை பெய்து ஓய்ந்தபின் — மேகங்கள் எல்லாம் விலகியபின் சந்திரவட்டத்திலே அலாதிக் காந்தி ஒளி வீசுமே, அதே காந்தி கமலாவின் கண்களிலே ஒளி வீசிற்று.

இந்த வார்த்தைகளைக் கேட்டதும் என் கண்களெதிரே கும்மிருட்டுப் பரவியது. காதுகள் 'ஙொய்' என்று ரீங்காரம் செய்தன.

"என்ன ஆகிவிடும் என்று கேட்கிறேன்!" என்று வெகு அலட்சியத்துடன் கேட்டேன்.

"என்ன ஆனால் உங்களுக்கு என்ன! அவமானப்படுகிறவள் நான்தானே!" என்று சொல்லிவிட்டுச் சிறிது நேரம் கமலா என்னையே பார்த்துக் கொண்டிருந்தாள். பிறகு அழ ஆரம்பித்து விட்டாள். எனக்கு அதைக் காண கொஞ்சம் பயமா யிருந்தது. அவளுடைய அந்த அழுகையையும் சிரிப்பையும் காண எனக்குப் பேயோ பிசாசோ என்ற சந்தேகம் எழுந்தது. பேய் பிசாசு என்று நினைத்த மாத்திரத்திலேயே எனக்கு உடல் எல்லாம் உதறல் எடுத்தது. ஒரு தடவை வியர்த்து விறுவிறுத்து விட்டது.

"கமலா! இந்த அழுகைக்கும் சிரிப்புக்கும் என்ன அர்த்தம்! எங்கேயாவது இருட்டிலே கிருட்டிலே பயந்து விட்டாயா, என்ன!" என்று கேட்டேன்.

"இல்லை!"

"அப்படியானால் என்ன!"

"ஏமாந்து போனேன்!"

"ஏமாந்து போனாயா! எதற்காக!"

"யாரோ ஒருவன் வந்திருந்தான்........." என்று சொல்லியவாறே அவள் 'கலகல'வென்று நகைத்தாள்.

"எப்பொழுது! என்ன விசேஷம்! இது என்ன! வெய்யிலும் மழையும் சேர்ந்து சேர்ந்து வருகிறதே!" என்று நான் ஆரம்பித்தேன்.

"சாயந்திரம் யாரோ வந்தான். உங்கள் சைக்கிள் மணிபோலவே அவனுடைய சைக்கிள்



மணிச் சத்தமும் இருந்தது. 'நீங்கள்தான் வந்துவிட்டீர்களாக்கும்!' என்று எண்ணி எப்பொழுதும் போலக் கதவைத் திறந்து விட்டு நின்றேன். இருட்டாயிருந்தாலும் அவன் 'கடகட' வென்று உள்ளே வந்துவிட்டான். உங்களைப் போலவே அவனுடைய நடையும் இருந்தது" என்றாள். அதற்குமேல் ஒன்றும் சொல்லாமல் அவள் வயிறு வலிக்கச் சிரிக்கலானாள்.

"சரி! அப்புறம் என்ன ஆச்சு!" என்று நான் ஆவலை அடக்கமாட்டாமல் கேட்டேன்.

"என்ன ஆகும்!" என்று அவளும் சிரித்துக் கொண்டே கேட்டாள்.

"எனக்கு நீ சொல்லுவது ஏதாவது புரிந்தால்தானே! நீ சொல்வதெல்லாம் ஒரு அதிசயமாகத்தான் இருக்கிறது. உன் புத்தி எங்கேயாவது புல் மேயப் போய்விட்டதா, என்ன! உன்னைக் கட்டிக்கொண்டு குடித்தனம் செய்தால் நாலு நாளிலே பைத்தியம் பிடித்துப் பாயைச் சுரண்ட வேண்டியதுதான்!" என்று நான் கோபித்துக் கொண்டேன்.

"உங்களுக்கு நான் சொல்வதெல்லாம் அதிசயமாகத்தான் இருக்கும். நான் சொல்வதைக் கேட்கிறீர்களா!"

"சொன்னால்தானே, கேட்பதற்கு!"

"உங்களிடம் படித்துப் படித்து நான் எத்தனை தடவை சீக்கிரம் திரும்பி வந்து விடுங்கோ என்று சொன்னேன்! இவ்வளவு தடவை சொல்லியிருக்கிறோமே, வந்து விடுவீர்களாக்கும் என்று எண்ணினேன். ஆனால் நீங்கள் வருகிற வழியாக இல்லை. நீங்கள் போனதும் குழந்தைகளைக் குளிப்பாட்டித் தலைவாரிப் பின்னி, நானும் புடவை உடுத்திக் கொண்டு தயாராகி விட்டேன். நீங்கள் வரவில்லை. கொஞ்ச நேரத்துக்கெல்லாம் வந்து விட மாட்டீர்களா என்று எண்ணினேன். சின்னப் பெண்ணுக்குப் பால் புகட்டிவிட்டுப் பெரிய குழந்தைகளுக்கெல்லாம் சாப்பாடும் போட்டேன். வடைக்கு மா அரைத்து எத்தனையோ நாழிகையாகி விட்டது. ஆகவே, வடை தட்ட ஆரம்பித்தேன். ஆனால் இந்தக் குரங்குகள் ஏதாவது ஒரு காரியம் செய்ய விட்டால்தானே!"

"அடியே, விஷயத்தைச் சொல்லாமல் சுற்றி வளைத்து எதற்காக வீண் பேச்சுப் பேசுகிறாய்!" என்று நான் நடுவில் குறுக்கிட்டேன்.

"அதுதான் சொல்லிக் கொண்டிருக்கிறேனே, கேளுங்களேன்! சின்னவள் அரை நாழிகை இருந்த இடத்தில் இருக்கிறவள் அல்லவே! கையில் காலில் எண்ணெயைச் சாய்த்துக்கொண்டு விட்டால் என்ன செய்வது என்ற பயம். ஆகவே ஒரு வடையைச் சட்டியில் போட்டு விட்டு. 'நீங்கள் வந்து விட்டீர்களோ!' என்று வாசற்புறம் வந்து பார்ப்பேன். அதனாலேயே எல்லா வடைகளும் உருப்படியாக இல்லாமல் உடைந்து விட்டன.



"இதற்குள் சின்னவள் கண்களைத் தூக்கம் சுற்றியதாலும், பெரியவன் சர விறகு ஒரே புகையாகப் புகைந்ததாலும் அழ ஆரம்பித்து விட்டார்கள். பாதி வடைக்குமேல் அடுப்பில் கருகிக் காந்திப் போய்விட்டது. மடியிலே ஒரு பெண். இரு பக்கத்திலும் இரண்டு வால்கள் — எல்லாம் சேர்ந்து காலைச் சுற்றிக்கொண்டு அழ ஆரம்பித்து விட்டன. அந்த நிலையில் என் மனம் எப்படியிருக்கும்! தலையைச் சுவரில் மோதி உடைத்துக் கொண்டு விட்டால் என்ன என்றுகூட ஆத்திரம் ஆத்திரமாக வந்தது. நீங்கள் வீட்டில் இருந்து கொஞ்சம் குழந்தைகளைப் பார்த்துக் கொண்டால் எவ்வளவு இலேசாகக் காரியத்தை முடித்திருப்பேன்! உங்கள் மேல் எனக்கு எரிச்சல் பற்றிக்கொண்டு வந்தது. அழாக் குறைதான்! நடக்க வேண்டியதெல்லாம் என்னவோ நடந்து விட்டது!" என்றாள்.

"ஐயோ, பாவம்! உனக்கு எத்தனை கஷ்டம்!" என்று ஆரம்பித்தேன்.

"போதுமே, உங்கள் பச்சாத்தாபம்! இந்தக் களேபரத்துக்கு மத்தியில்தான் பக்கத்து வீட்டு நாராயணிப் பாட்டி தன் மாட்டுப் பெண்ணிடம் சண்டை போட்டுக்கொண்டு என்னிடம் அவளைப் பற்றிக் குறை கூற வந்து சேர்ந்தாள். அவளிடம் அநுதாபம் காட்டி மெதுவாக இந்த வடைகளைத் தட்டச் சொன்னேன். ஏதோ 'காமா சோமா' என்று ஒருவிதமாகக் காரியம் ஒப்பேறியது.

"குழந்தைகள் 'குய்யோ, முறையோ' என்று கதறியபொழுது உங்கள் நினைவு வந்தது. நீங்கள் மட்டும் அப்பொழுது இங்கேயிருந்தால் இந்தக் கோட்டான்களை உங்கள் தலையில் கட்டி வேடிக்கை பார்த்திருப்பேன். உங்கள் நினைவு வந்தபொழுதுதான் வாசலில் சைக்கிள் மணி அடித்தது. 'நீங்கள்தான் வந்து விட்டீர்களாக்கும்!' என்று ஓடோடியும் வந்து வாசற்கதவை திறந்தேன். இருட்டில் நீங்கள்தான் வந்திருக்கிறீர்களா அல்லது வேறு யாராவது வந்திருக்கிறீர்களா என்று அடையாளம் கண்டு கொள்ள முடியவில்லை. அவன் நடைக்கும் உங்கள் நடைக்கும் கொஞ்சங்கூட வித்தியாசம் தெரியவில்லை. அவன் செருப்புச் சத்தம்கூட உங்கள் செருப்புச் சத்தம் போலவே இருந்தது."

"அப்புறம்!" என்று கேட்டேன் வியப்புடன்.

"அப்புறம் என்ன! நீங்கள்தான் வந்து விட்டீர்களாக்கும் என்று நிர்மானித்து விட்டேன். அவன் உள்ளே வந்ததும் நீங்கள்தானாக்கும் என்று காதைப் பிடித்துத் திருகலானேன். ரத்தம் வரும் வரைக்கும் காதைக் கரைக்கவேண்டும் என்று தான் தோன்றியது. உங்கள் மேல் எல்லை மீறிக் கோபம் உண்டாகவே, என் கைப்புலம் எல்லாம் எங்கேயோ போய் விட்டது. இருக்

நானும் பலம் கொண்ட மட்டில் காதைப் பிடித்துத் திருகினதாகத்தான் ஞாபகம். ஆனால் காதில் கை வைத்ததும் ஏனோ தெரியவில்லை, கொஞ்சம் பயமாக இருந்தது. கைக்குள்ள புத்திகூட இந்த மூளைக்கு இல்லை. என் கையே, 'நீங்கள் இல்லை' என்பதைச் சொல்லிவிட்டது!

"உடல் நடுநடுங்கியது. ஏக காலத்தில் எண்ணூறு தேள்கள் கொட்டி விட்டது போன்ற உணர்ச்சியில் துடிக்கலானேன். என்னத்தைச் சொல்ல! வெட்கம், மானம், சூடு, சொரணை எல்லாம் செத்து விட்டன. அப்புறம் எப்படித் தான் வீட்டுக்குள்ளே வந்தேனோ, தெரியாது! பக்கத்தில்தான் நின்று கொண்டிருந்தான் பெரியவன். 'இது அப்பா இல்லை, அம்மா!' என்று சொன்னான்.

"பாவம்! அந்த மனுஷ்யன், 'சுந்தரம் வந்திருந்தான் என்று சொல்லுங்கள்!' என்று சொல்லிவிட்டு வாய் திறக்காமல் வெளியே போய் விட்டான். என்ன அவமானம்! என்ன அவமானம்! நாக்கைப் பிடுங்கிக்கொண்டு செத்து விடலாம் போலிருக்கிறது. அவன் யாரோ, எவனோ? என் மூளை இப்படி யெல்லாம் போவானேன்!" என்று கமலா தன்னைத் தானே நிந்தித்துக் கொண்டாள். அவள் கண்களில் நீர் துளிர்த்து நின்றது.

எல்லா விஷயத்தையும் கேட்ட பிறகு எனக்கு ஒரேயடியாகச் சிரிப்பு வந்தது. "ஓகோ! இதைத்தானா குழந்தை, 'அம்மா காதைப் பிடித்துக் கரைத்து விட்டாள்!' என்று சொல்லிக் கொண்டிருந்தான்! சரி, அதற்காக ஒன்றும் யோசனை பண்ணாதே! நன்றாக அவனுடைய காதைப் பிடித்துக் கரைத்து விட்டாயோ, இல்லையோ! நல்ல வேளை! இல்லாவிட்டால் அந்தத் தண்டனையை நான் அல்லவா அநுபவித்திருக்க வேண்டும்!" என்றேன்.

"அந்தச் சம்பவத்தை நினைத்தால் சிரிப்பு வருகிறது. அவமானத்தை நினைத்தால் அழுகை வருகிறது!" என்றாள் கமலா.

"பரவாயில்லை. இம்மாதிரிச் சம்பவங்கள் நடப்பது உண்டு. சுந்தரம் ஒன்றும் அயல் வீட்டுப் பையன் இல்லை. என்னிடம் படித்த பையன்தான் அவன். அன்றைக்கு ஒருநாள் பேச வந்திருந்தானே, அவனேதான்!"

"அப்படியா! நீங்கள், 'யாரோ வாத்தியார்' என்றல்லவா அன்றைக்குச் சொன்னீர்கள்!"

"ஆமாம். அவன் இப்பொழுதுதான் உபாத்தியாயர் ஆனான். நாம் திருச்சியில் இருந்த பொழுது நம் வீட்டோடு ஒரு பையன் இருந்தானே, அவன்தான் இவன்! உனக்குப் பெயர் நினைவில்லையா! நம் வீட்டிலும் வாரத்துக்கு ஒரு நாள் வாரச் சாப்பாடு சாப்பிட்டுக் கொண்டிருக்கவில்லையா! அவனே தான் இவன்! நினைவிருக்கிறதா! உன்னை 'மாமி, மாமி!' என்று அடிக்கடி அன்புடன் கூப்பிடு வானே! இன்னுமா நினைவு வரவில்லை!"

"ஆமாம்; அவனுக்குச் 'சோமு' என்று பெயரில்லையோ!"

"ஆமாம், ஆமாம், அவன்தான்! முழுப் பெயர் சோமசுந்தரம். நாம் 'சோமு, சோமு' என்று கூப்பிட்டு வந்தோம்."

"எனக்குச் சுந்தரம் என்று சொன்ன பொழுது ஒன்றும் புரியவில்லை. அவன்தானா! இருந்தாலும் இப்பொழுது எத்தனை பெரியவன் ஆகிவிட்டான்! நான் அப்படிச் செய்ததற்கு என்ன எண்ணியிருப்பானோ, யார் கண்டார்கள்! அப்பப்பா! என்ன இருந்தாலும் நான் செய்தது துளிக்கூட நன்றாயில்லை."



பையன் :—அப்பா, இங்கே பஸ் நிற்பதற்காகப் போர்டு போட்டிருக்கிறது. ஆனால் ஒரு பஸ் கூட நிற்க மாட்டேன் என்கிறதே!

அப்பா (எரிச்சலுடன்) :— ஆமாம், பஸ் இங்கே நிற்காது. ஆனால் மனிதர்கள் மட்டும் எப்போதும் நின்று கொண்டிருப்பார்கள்!

"ஒன்றும் பரவாயில்லை. கவலைப்படாதே! நானே அவனுக்குக் குரு. குருவின் மனைவி தாயைப்போல! தெரிந்ததா!" என்று கமலாவைச் சமாதானப் படுத்தினேன்.

"போதுமே! எப்பொழுதும் இதே பரிகாசம்தானா! எத்தனையோ நாள் ஆகிவிட்டது. இருந்தாலும் அந்தச் சம்பவம் நினைவுக்கு வந்தால் மனத்தை என்னவோ செய்கிறது! நீங்கள் என்ன சொன்னாலும் அந்த விஷயம் மனத்தை விட்டு அழியவே மாட்டேன் என்கிறது!" என்றாள் கமலா.

"என்னவோ! எனக்கு அந்தச் சம்பவத்தினாலே ஒரு பிரயோஜனம் ஏற்பட்டது!"

"என்ன பிரயோஜனம்!"

"ஒரு பிரயோஜனம் ஏற்பட்டது. அதற்கு மேல் உனக்கு எதற்கு!"

"சொல்லுங்களேன்!"

"சொல்லட்டுமா!"

"ஊம்!"

"சொல்லி விடுவேன்!"

"அதுதான் சொல்லுங்களேன் என்கிறேனே! சொன்னால் எனக்கு என்ன!"

"ஒன்றுமில்லை. சிநேகிதன், மளிகைக் கடைக்காரன், துணிக் கடைக்காரன், சொந்தக்காரன், எந்தப் பயலுக்குமே நம்ம வீட்டு வாசற்படியை மிதிக்கத் துணிவு ஏற்படாது."

"ஏன் ஏற்படாது!"

"தங்களுடைய காதையும் பிடித்து நீ கரைத்து விட்டால் என்ன செய்வது என்று அவர்களுக்குப் பயமாயிருக்காதா!"

"போதுமே, பரிகாசம்!"

[ஸ்ரீ நரசிம்மாவின் தெலுங்குக் கதையைத் தழுவியது ]




# தண்டனைக்குப் பரிசு

டி. ஆர். குருஸ்வாமி

மில்லில் ஒரே கூட்டம். ஊரில் பிடாரிக்குத் திருவிழா. ஏழை, பணக்காரர் அனைவருமே நெல் அரைக்கக் கூடியிருந்தார்கள். வருஷத்துக்கு ஒரு நாள்! பிடாரிக்கு மாவிளக்கு ஏற்றுவதற்காகப் பானையில் நீண்ட நாட்களாகப் பத்திரப்படுத்தி வைத்திருந்த நெல்லைக் கூடையில் கொட்டி எடுத்துக் கொண்டு மில்லில் கூடியிருந்தார்கள்.

"இந்தா, அம்மா! 'பர்மிட்டு' இருக்குதா?" என்று கேட்டார் மில் கணக்குப் பிள்ளை சதாசிவம்.

"பெர்மிட்டுன்னு என்னு சாமி?—"

"அதுதான் அம்மா, நெல்லு குத்துவதற்குச் சீட்டு! அது இருந்தால் நெல்லை இறக்கு. இல்லா விட்டால் தூக்கிக் கொண்டு நட" என்று கண்டிப்பாக உத்தரவிட்டார் சதாசிவம்.

"என்னு சாமி பண்ணுகிறது? ஊரிலே திருவிழா. அதற்காக நாலுபடி நெல்லை அரைக்கக் கொண்டு வந்தால்... நாங்கள் என்ன மிராசுதாருங்களா, சீட்டையும் நாட்டையும் வாங்க! இன்னைக்கு ஒரு பொழுது நீங்க மனசு வெச்சுத்தான் ஆகணும்..." என்றனர் மில்லில் கூடியிருந்த பெண்கள்.

"நான் என்ன அம்மா பண்ணுகிறது? ரேஷனிங் ஆபீசர் புதிசு. சிறு வயசாம். இளங்கன்று பயமறியாது. திடீரென்று சோதனைக்கு வந்து விட்டால் உன் நெல்லும் போகும்; என் தொழிலும் போய் விடும்" என்று தன் சிரமத்தைச் சொன்னார் சதாசிவம்.

"நீங்கள் என்ன செய்வீர்களோ, தெரியாது! இந்தத் திருவிழாவுக்கு நீங்கள் அரைத்துக் கொடுத்தால்தான் மாவிளக்கு. இல்லாவிட்டால்......"

சதாசிவத்தின் நிலைமை தர்ம சங்கடமாகி விட்டது. அந்த ஊர்ப்பிடாரி, மகாசக்தி வாய்ந்த தெய்வம். அது பத்து வருஷத்துக்கு ஒரு முறைதான் வெளியில் பவனி வரும். அப்படி விழா நடக்கும் நாட்களில் ஊரிலுள்ளவர்கள் மாவிளக்கு ஏற்றுவது வழக்கம். அது நம் காரணமாக நின்று விட்டால்.........?

இந்த எண்ணம் சதாசிவத்தினுடைய உள்ளத்திலே திகிலை உண்டு பண்ணியது.

ஆனாலும் ரேஷனிங் ஆபீசரோ புதிசு! குணம் எப்படியோ? திடீரென்று சோதனைக்கு வந்தால்...? மில் 'பிராஸிக்யூட்' செய்யப்பட்டு விடும். சதாசிவத்துக்கு வேலை போவதோடு மட்டும் அல்ல; சிறைக்கே அனுப்பப்பட்டாலும் படலாம். அப்படி நேர்ந்து விட்டால்......? வீட்டில் உள்ள அவர் மனைவியின் கதி? கல்யாணத்துக்குக் காத்திருக்கும் மகளின் நிலைமை...?

சதாசிவம் எத்தனையோ உத்தியோகங்கள் பார்த்து ஓய்வுபெற்றவர். ஒரே ஒரு வீட்டைத் தவிர அவருக்கு ஆஸ்தி, பூஸ்தி என்று ஒன்றுமே கிடையாது. ஆகவே, வயதான காலத்தில் குடும்ப பாரத்தை ஓரளவு சரிக் கட்டுவதற்காக அவர் அந்த மில்லில் நாற்பது ரூபாய்க்குக் கணக்

குப் பின்னையாக அமர்ந்தார். சாமான்கள் யானை விலை, குதிரைவிலை விற்கும் இந்த நாளில், அந்த நாற்பது ரூபாய்கள் அவருடைய குடும்பச் செலவுக்கே போதவில்லை. மகள் வனஜாவின் கல்யாணத்தைப் பற்றி அவர் எப்படி எண்ண முடியும்?

சதாசிவம் இத்தனை கஷ்டங்களின் காரணமாகத்தானோ என்னவோ, தெய்வத்தினிடம் விசேஷ பக்தி கொண்டிருந்தார். மனித உதவி பயனில்லாமலிருக்கையில் தெய்வந்தானே உதவி செய்ய முடியும்? அதிலும், அந்தப் பிடாரி அவருடைய குல தெய்வம். ஒவ்வொரு நாளும் அந்தக் கோவிலுக்குப் போய் விட்டுத்தான் அவர் மில்லுக்குப் போவார்.

அந்தத் தெய்வத்துக்குத் திருவிழா. எல்லாரும் அரிசிக்கு அவரை நம்பிக் கொண்டிருக்கிறார்கள். உரலில் குத்திப் புடைக்க வசதியில்லை. மில் வந்த பிறகு மரக் குந்தாணிகள் மக்கிப்போய் விட்டன. உலக்கைகள் ஒடிந்து அடுப்பு எரிக்கப் பட்டு விட்டன. இதை எண்ணிய சதாசிவம் மேலும் யோசனை செய்வதை விட்டு விட்டு 'மளமள' வென்று சீட்டுப் போட ஆரம்பித்து விட்டார்.

அவ்வளவுதான்! மேஜையைச் சுற்றி ஏகக் கனைபரம். "சாமி, கால் மரக்கால்..." "எட்டு மரக்காலுக்குச் சீட்டுக் கொடு, சாமி!" "பதக்கு நெல்லுக்கு என்ன ஆவுது சாமி!" என்று அவரைச் சுற்றிலும் ஏகக் கூச்சல்!

*     *     *

"என்ன ஐயா, ரிஜிஸ்தர் எங்கே? எடும்! இந்த நெல்லுக்கெல்லாம் பர்மிட்டு இருக்கிறதா?" என்று உதவி ரேஷனிங் ஆபீசர் தன் மேஜைக்கு அருகில் வந்து கேட்கும் வரையிலே ஆபீஸர் வந்ததைக் கவனிக்காமலே சீட்டுப் போட்டுக்கொடுத்துக்கொண்டிருந்தார் சதாசிவம்.

ரேஷனிங் ஆபீசரின் அந்தக் குரலைக் கேட்டுத் தலை நிமிர்ந்த அவர் வெலவெலத்துப் போய் வெறிக்கப் பார்த்தார்.

"என்ன ஐயா விழிக்கிறீர்? இந்த நெல்லுக்கெல்லாம் பர்மிட்டு எங்கே?"

"... ... ... ..."

"ரிஜிஸ்தரை எடும்!"

சதாசிவத்தின் கை, தானாகவே ரிஜிஸ்தரை எடுத்து மேஜையின் மேலே போட்டது. ஆபீசர் அதைப் புரட்டினார்.

"என்ன ஐயா, இந்தத் தேதிக்குப் பதிவையே காணோமே..."

"இ...ல்...லை. வந்து..."

"என்ன ஐயா இல்லை வந்து...? பர்மிட் இல்லாமல் அரைக்கக் கூடாது என்பது உமக்குத் தெரியுமா, இல்லையா?"

"தெரியும்..."

"அப்படியிருக்கையில் இவ்வளவு நெல்லை ஏன் அரைக்கிறீர்?"

"ஊரிலே திருவிழா..."

"திருவிழாவுக்கு என்றால் சர்க்கார் சும்மா விட்டு விடுவார்களா? எழுதும் ஸ்டேட்மெண்ட்."

ஆபீசர் சொல்லிக் கொண்டே போனார். சதாசிவம் பேசாமல் அதை எழுதினார். "எனக்கு இது குற்றமென்று தெரிந்தே நான் இதைச் செய்து விட்டேன். ஏராளமான நெல்லைப் பர்மிட்டு இல்லாமல் அரைத்து விட்டேன். ஆபீசர் பார்க்கும் போது மில் நிறையப் பர்மிட்டு இல்லாத நெல்லின் கும்பல் இருந்தது......"

கையெழுத்துப் போட்டுச் சதாசிவம் காகிதத்தை ஆபீசரின் கையில் கொடுத்தார். அவர் அதை மடித்துத் தன் சட்டைப் பையில் வைத்துக் கொண்டார். பிறகு ஆட்களைவிட்டு நெல்லை லாரியில் ஏற்றச் சொன்னார். கடைசியாக மில்லைப் பூட்டி 'ஸீல்'வைத்து விட்டுப் புறப்பட்டு விட்டார். சதாசிவமும் பின் சென்றார்.

*     *

சதாசிவத்துக்குப் பர்மிட்டு இல்லாமல் நெல் அரைத்த குற்றத்துக்காக ஒரு மாதம் சிறைத் தண்டனை கிடைத்தது. சிறைக்குப் போன சில நாட்களுக்குள்ளேயே அவர் வீட்டில் பணக் கஷ்டம் தாண்டவமாடத் தொடங்கியது.

சதாசிவத்தின் மனைவிக்கு ஒன்றுமே தோன்றவில்லை. 'என்ன செய்யலாம்?' என்று யோசித்து யோசித்துப் பார்த்தாள். கடைசியில் வீட்டின் மாடியிலுள்ள அறைகளையெல்லாம் வாடகைக்கு விட்டு விடுவதென்று முடிவு செய்தாள்.

இந்த நாளில் வீடு வாடகைக்கு விடப்படும் என்று கேட்டாலே போதாதா?



எஜமானி:—அடே, போன தடவை வாங்கி வந்த தீப்பெட்டி சுத்த மோசம். இந்தத் தடவை யாவது நல்ல பெட்டியாகப் பார்த்து வாங்கிக் கொண்டு வந்தாயா?

வேலைக்காரன்:—ஆமாம், அம்மா! கடைக்காரன் சொன்னதைக் கூட நம்பாமல் எல்லாக் குச்சிகளையும் கிழித்துப் பார்த்து வாங்கிக் கொண்டு வந்திருக்கிறேன்!



யாரோ ஒரு இளைஞர் வந்து வீட்டைப் பார்த்து விட்டு, தானே மாடி முழுவதையும் எடுத்துக் கொள்வதாகக் கூறி இரண்டு மாத வாடகையையும் முன் பணமாகக் கொடுத்து விட்டுப் போய்விட்டார்.

மறுநாளே அவர் மாடிக்குக் குடி வந்தும் விட்டார். அவருடன் வேறு யாருமில்லை. ஒரே ஒரு வேலையாள் மட்டும்தான் இருந்தான். 'அவர் யார்? எங்கே வேலை?' என்பதைப் பற்றியெல்லாம் சதாசிவத்தின் மனைவி விசாரிக்கவில்லை. 'இரண்டு மாத வாடகை முன் பணமாக வரும்போது யார் குடியிருந்தால் என்ன?' என்று அவள் பேசாமல் இருந்து விட்டாள்.

ஆனால், வனஜாவினால் அப்படிப் பேசாமல் இருந்துவிட முடியவில்லை. அவள் மாடியில் குடி வந்திருக்கும் இளைஞரைப் பற்றி ஆராய ஆரம்பித்தாள். அதற்குக் காரணம் இல்லாமலில்லை.

"வீடு வாடகைக்குக் கிடைக்குமாமே?" என்று கேட்டுக் கொண்டு வாசற்படியில் நின்ற இளைஞரைக் கண்டவுடன் அவளுக்கு ஏற்பட்ட ஒரு இன்ப போதை அவளை ஒரு பைத்தியமாகவே ஆக்கி விட்டது.

அதேசமயத்தில் அந்த இளைஞரும் வனஜாவுக்கு ஏற்பட்டது போன்ற லாகிரியில் மூழ்கி விட்டார் என்றுதான் சொல்ல வேண்டும். இல்லாவிட்டால் தினமும் ஆபீஸுக்குப் புறப்படும் போது அந்த வாசல் புறத்து ஜன்னலை அவர் ஏன் அப்படி வெறித்துப் பார்க்க வேண்டும்?

அன்று சதாசிவத்துக்கு விடுதலை நாள். விடுதலையானவுடனே வீட்டை நோக்கி ஓடோடியும் வந்தார். அவர் மனத்தில் எத்தனை எத்தனையோ எண்ணக் குவியல்கள்! போராட்டங்கள்! அலை அலையாக எண்ணங்கள் மனத்தை மோத, ஓட்டமும் நடையுமாக வீடு இருக்கும் சந்துத் திருப்பத்தையும் தாண்டி விட்டார். ..... அதோ, அதுதான் அவர் வீடு!

இது என்ன ஆச்சரியமாக இருக்கிறதே! இவன் எங்கே வந்தான்?

அதற்குள் அந்த மனிதர் சதாசிவத்தை அடையாளம் கண்டு கொண்டு விட்டார். "என்ன அப்பா! சதாசிவமா? இது என்ன வேஷம்? தாடியும் மீசையும் ஆள் அடையாளமே தெரியாமல் உருமாறி விட்டாயே!" என்று கேட்டார் அவர்.

"ராமசாமியா? ஏது அப்பா, இத்தனை தூரம்? ஊரில்தானே இருக்கிறாய்?" என்று எதிர்க் கேள்வி கேட்டார் சதாசிவம்.

"நீயும் நானும் விளையாடிய அதே தெருவில், அதே வீட்டுத் திண்ணையில் தான் இன்னும் இருக்கிறேன். இங்கே என் பிள்ளைக்கு மாற்றலாகி இருக்கிறது. அவனைப் பார்த்து விட்டுப் போகலாம் என்று..."

"இங்கே எங்கே இருக்கிறான்? எனக்குத் தெரியாதே! வா, அப்பா! பார்ப்போம், உன் மகனை!"

"அதோ, அந்த மச்சு வீட்டு மாடியிலே தான் குடியிருக்கிறான். வந்து...நீ இங்கே தான் குடியிருக்கிறாயா?" என்று கேட்டார் ராமசாமி.

அவர் சதாசிவத்தின் பால்ய சிநேகிதர். ஆனால் சமீப காலமாக இருவருக்கும் அதிகத் தொடர்பு இல்லாததால் வீட்டு விஷயங்களை அறிந்து கொள்ளாமலே குசலப் பிரச்னம் நடந்தது. சதாசிவம் ராமசாமியைத் தன் வீட்டுக்கு அழைத்துச் சென்றார்.

"அடடே, இதுவா உன் வீடு? சரி தான்! நம் பயல் நல்ல பாதுகாப்பில்தான் இருக்கிறான்."

சதாசிவத்துக்கு விஷயமே புரியவில்லை. 'மாடியில் யார் குடி வைத்தது? எப்போது வந்தார்கள்! குடியிருப்பது யார்?' என்றெல்லாம் மூளையைக் குழப்பிக் கொண்டு மனைவியின் முகத்தைப் பார்த்தார்.

அந்த முகத்தில் எந்தப் படக் காட்சியும் காரணத்தை விளக்கவில்லை. இருந்தாலும்

ஒரு லேசான புன்னகை மட்டும் மலரத் தவறவில்லை. 'சரி, இது மனைவியின் வேலை தான்!' என்பதை ஊகித்து உணர்ந்து கொண்டார் சதாசிவம்.

"அம்மா, வனஜா! ஐயாவுக்குத் தண்ணீர் கொண்டு வா!" என்று உள்ளே பார்த்துக் கட்டளையிட்டார் சதாசிவம்.

சிறிது நேரத்துக்கெல்லாம் வனஜா தண்ணீர்ச் செம்புடன் வந்தாள். அவளையே கண் கொட்டாமல் பார்த்தார் ராமசாமி.

"சதாசிவம், உனக்கு இவ்வளவு பெரிய பெண் இருக்கிறாளா? எனக்குத் தெரியவே தெரியாதே! நம் பையனுக்குக் கல்யாணம் பண்ணி வைக்கப் பெண்ணுக்கு அல்லவா அலைந்து கொண்டிருக்கிறேன்! கையிலே கிளியை வைத்துக் கொண்டு......சரிதான். உன் மகளையே நம் பையனுக்குக் கட்டிக் கொள்ளுகிறேன். நம் பையன் ஒரு மாசமாக 'இப்போது கல்யாணம் வேண்டாம்' என்று கடிதாக எழுதி வருவதற்குக் காரணமும் இப்போதுதான் எனக்குப் புரிந்தது."

"என்ன ராமசாமி! நீ கேட்டு நான் தரமாட்டேன் என்று சொல்லுவேனா? எனக்கு இதற்கு மேல் நல்ல சம்பந்தம் எங்கே கிடைக்கப் போகிறது? உன் அந்தஸ்துக்கு என் வீட்டிலே பெண் எடுப்பாயா?" என்றார் சதாசிவம்.

"அட, போ! நீ ஒன்று! கடவுள் சாட்சியாக உன் பெண்ணையே என் பையனுக்குக் கட்டிக் கொள்ளுகிறேன். ஒரு வாரத்துக்குள்ளே பரிசம். என்ன, சம்மதம்தானே? பரிசம் என்ன?"

"அது சரி! பையனைக் கேட்காமல்..." என்று இழுத்தார் சதாசிவம்.

"அதற்கு என்ன? பையன் எங்கே தில்லியிலேயா இருக்கிறான்? இதோ கூப்பிட்டு வருகிறேன்" என்று சொல்லிவிட்டு மாடிக்குப் போனார் ராமசாமி.

அவர் சென்ற சிறிது நேரத்துக்கெல்லாம் சதாசிவத்தின் வீட்டுக்குள் அந்த ஊர் உதவி ரேஷனிங் ஆபீஸர் நுழைந்தார். இந்த வேளையில் 'இவர் எங்கே வந்தார்? முன்னால் ஒரு மாதம் சிறைக்கு அனுப்பியது போதாதா?" என்று எண்ணம் எழுந்ததுதான் தாமதம்; சதாசிவத்தின் முகம் பேயறைந்தது போல் ஆகிவிட்டது. இன்னும் சற்று நேரம் வரையில் ராமசாமி அங்கே வராமல் இருந்திருந்தால் "நான் ரிஜிஸ்தர் இல்லாமல் இனிமேல் நெல் அரைக்கவில்லை" என்று சதாசிவம் கத்தியே இருப்பார்.

அதற்குள் ராமசாமி கீழே இறங்கி வந்து "என்ன சதாசிவம்! இப்படி விழிக்கிறாய்? இவன்தான் என் மகன். தெரிகிறதா?" என்று அறிமுகப்படுத்தினார்.



அதைத் தொடர்ந்தாற் போலவே, "பையனைக் கேட்டாயிற்று. அவனுக்கு இரட்டைச் சம்மதம்" என்று முத்தாய்ப்பும் வைத்தார் ராமசாமி.

ஒரு நிமிஷம் யோசித்தார் சதாசிவம். தன்னைத் தண்டனைக்கு உள்ளாக்கினவனுக்கா பெண் கொடுப்பது?

"கூடாது!" என்றது அவர் மனம்.

"ஏன் கூடாது? அவன் தன் கடமையைத்தானே செய்தான்? நம்மை முன்னால் தெரியுமா? இல்லை, நாம்தான் சொன்னோமா?" என்று மடக்கியது உள் மனம்.

அடுத்த கணமே சதாசிவம் ஒரு முடிவுக்கு வந்தவராய், "சரி, ராமசாமி! என் பெண் உன் பெண் மாதிரி! எல்லாம் உன் இஷ்டம் நீ சொன்னால் சரிதான்!" என்று சொல்லி விட்டார்.

தண்டனைக்குப் பரிசாக வனஜாவைத் தனக்கு அளிக்க முன் வந்த மாமனார் சதாசிவத்தின் பெருந்தன்மையைக் கண்ட உதவி ரேஷனிங் ஆபீஸர் சுப்பிரமணியம் கண்ணில் நீருடன், "என்னை மன்னித்து விடுங்கள், மாமா!" என்று நாத் தழுதழுக்கச் சொல்லி வணங்கினார்.

DX 368TM

# திருக்கழுக்குன்றத்துப் பட்சிகள்

ஒவ்வொரு நாளும் காலை 11 மணிக்கு திருக்கழுக்குன்றம் கோவில் குருக்கள் அருகிலுள்ள பாறை ஒன்றின்மீது சாதத்தை வைக்கிறார். உடனே இரண்டு கழுகுகள் பறந்து வருகின்றன. சாதத்தைப் புசிக்கத் தொடங்குகின்றன. இந்தப் பறவைகள் பிரதி தினமும் புனித காசியிலிருந்து புறப்பட்டு வந்து இலங்கைக்குப் போவதாக மக்களிடம் ஒரு நம்பிக்கை நிலவி வருகிறது. நூற்றாண்டுகளாக நடைபெற்றுவரும் இந்நிகழ்ச்சி, கோவிலுக்குப் பட்சி தீர்த்தம் என்கிற பெயரை அளித்துள்ளது. பட்சி தீர்த்தம் என்றால் பட்சிகள் உறையும் புனித ஸ்தலம் என்று பொருள்.

டன்லப் கண்டுபிடிப்பின் மூலமாக மோட்டார் பிரயாணம் பிரமானந்தத்தையளித்து வருகிறது. அவர் பெயர் கொண்ட டயர்கள் எந்த நிலைமையிலும் பத்திரமுள்ளதாகவும் சிறந்தும் விளங்குகின்றன.



# டன்லப்





சென்னையிலிருந்து எந்தக் காலத்திலும் பிரயாணம் செய்யக்கூடிய ரஸ்தா 34 மைல் தூரத்திலுள்ள செங்கல்பட்டுப் போகிறது. அங்கிருந்து கடற்கரை நோக்கி கப்பிபோட்ட ஒரு ரஸ்தா ஒன்று போகிறது. இந்த ரஸ்தாவில் 9½ மைல் தொலைவில் திருக்கழுக்குன்றம் கோவில் இருக்கிறது.



* "மோட்டார் பிரயாண ஸ்தலங்கள்" என்னும் தொடரில் இரண்டாவது.

# உயர் ரக ஸ்விஸ் கடிகாரங்கள்

சரியான நேரத்தைக் காட்டுவதற்கு உத்திரவாதம்.

இந்திய சீதோஷ்ண நிலைக்கேற்றவாறு விசேஷமாகத் தயாரிக்கப்பட்டது.

ஒவ்வொன்றும் மூன்று வருஷ உத்திரவாதம்.

நெ. 23 அல்லது 24 இரண்டிற்கும் ஒரே விலை.



No. 23 Size 7¾



No. 24 Size 6¾

5 ஜுவல் க்ரோம் 32/- ரோல்டு கோல்டு 37/-
7 ,, க்ரோம் 37/- உயர் ரகம் 39/-
15 ,, க்ரோம் 44/- ரோல்டு கோல்டு 49/-
15 ,, ரோல்டு கோல்டு (20 மைக்ரோன்ஸ்) 64/-



No. 25, Size 8¾

5 ஜுவல் க்ரோம் 28/- ரோல்டு கோல்டு 33/-
7 ,, க்ரோம் 32/- உயர் ரகம் 36/-
15 ,, க்ரோம் 43/- ரோல்டு கோல்டு 48/-
15 ,, ரோல்டு கோல்டு (20 மைக்ரோன்ஸ்) 63/-



No. 26 Size 6¾

5 ஜுவல் க்ரோம் 21/- ரோல்டு கோல்டு 24/-
15 ,, க்ரோம் 44/- ரோல்டு கோல்டு 54/-
15 ,, ரோல்டு கோல்டு (20 மைக்ரோன்ஸ்) 68/-
டைம் பீஸ் 20/- உயர் ரகம் 25/-
பாக்கெட் வாட்ச் 12/- உயர் ரகம் 15/-

தபால் செலவு தனி. இரண்டு கடிகார ஆர்டருக்கு தபால் செலவு இலவசம்.

**PIONEER WATCH Co**
**POST BOX NO 11428 CALCUTTA**



## 'கோலினஸ்' புன்னகையில் வெற்றி நடனமாடுகிறது!

நுரை தான் இந்த வித்தியாசத்திற்குக் காரணம்!

அதி சிக்கனமானதுங்கூட —ஏனெனில் அரையங்குல அளவே போதுமானது!






ஈரமில்லாத பிரஷில் உபயோகிப்பதே உத்தமம்

இந்தியாவில் தயாரிப்பாளர்கள்:
ஜியாப்ரே மானர்ஸ் & கோ. லிட்.
பம்பாய் 1.
கிளைகள்: கல்கத்தா-மதராஸ்-டில்லி.

ஷாலிமார் தயாரிப்புகளை ஆர்டர் செய்யும்போது எந்த வேலைக்காக என்பதைத் தெரிவிக்கவும்.






ஷாலிமார் மாட்கோட் நீடித்து உழைக்கவல்ல, கழுவிவிடக் கூடிய, பூஞ்சக் காளான் படியாத ஓர் எண்ணெய் கலந்த வர்ணப்பூச்சு. காரை, காங்கிரீட், சிமெண்டு, மரத்தின்மேல் பூசலாம். ஷாலிமார் மாட்கோட் 24 அழகிய வர்ணங்களில் கிடைக்கும்.

**அடித்தாற் போல் சொல்லுங்கள் ஷாலிமார் மாட்கோட்**

SPX-54-TM

சுவர்களுக்கான வர்ணப்பூச்சு

**SHALIMAR PAINT, COLOUR & VARNISH CO., LTD.,**

Post Box 136, Madras 1. Importers & Distributors for Ceylon:
Lewis Brown & Co., Ltd., Post Box 85, Colombo



# ஸ்ரீ அம்பாள் லாட்ஜ்

65-C, உஸ்மான் ரோடு,
தியாகராயநகர் :: மதராஸ்-17

1951 மே மாதம் 25-ம் தேதி திறக்கப் பட்டுள்ளது. குறைந்த விகிதத்தில் அதிக வசதிகளுடன் கூடிய சௌகரியமான இடம். கண்யமான சுற்று வட்டாரமுள்ள நல்ல இடத்தின் மத்தியில் ஸ்தாபிக்கப் பட்டுள்ளது.

**உங்கள் குன்றாத ஆதரவை என்றும் நாடுகிறோம்**

## பாக்கெட் ரப்பர் பிரஸ்



எல்லா ஆங்கில எழுத்துக்களும் கொண்ட சிறிய அச்சடிக்கும் இயந்திரம் இது. ஒன்றை வாங்கி ஐந்தே நிமிஷங்களில் உங்களது லெட்டர் பாடுகள், பில்கள், பெயர்கள் இவைகளை அச்சடித்துக்கொள்ளுங்கள். மிகவும் ஆச்சரியகரமான நவீனம். அச்சடிக்கும் பாடு, இங்க், விவரங்களடங்கிய குறிப்புகள் சகலமும் உள்பட ஒன்றின் விலை ரூ. 6/- வி. பி. பி. சார்ஜ் ரூ. 1-4 தனி.

டெலிகிராபி டைமை: தந்தியடிக்கக் கற்றுக்கொண்டு பழக ஓர் உயர்ந்த கருவி. கற்றுக்கொண்டு வேலைக்கு முயற்சி செய்யுங்கள். 15 தினங்களில் கற்றுக்கொள்ளலாம். ஒன்றின் விலை ரூ. 5/- தபால் செலவு ரூ. 1/4 தனி. டெலிகிராபி மாஸ்டர் ரூ. 1/8; தபால் செலவு அணா 8 தனி.

**SANSAR TRADING Co (PDK)**

KANWARIGANJ. ALIGARH. U. P. [INDIA]

---

**மிகவும் அபூர்வமான**

# PEPS

**வெந்த தொண்டைக்கு ஆறுதலளித்து இருமல், ஜலதோஷம், இன்ப்ளுவென்ஸாவை ஒழிக்கிறது**

பெப்ஸ் மாத்திரை வாயில் கரையும்போதே அதன் மருந்து சத்துக்கள் சுவாஸப் பைக்கும் மார்புக்கும் செல்கின்றன. பெப்ஸிலுள்ள அபூர்வ சத்துக்கள் வெகு விரைவில் அபாயகரமான கிருமிகளை அழித்து, தொண்டை கரகரப்பை அகற்றி, நமைச்சலைப் போக்கி, ஓயாத இருமலையும் அடியோடு நிறுத்தி விடுகிறது. சாப்பிட இனிமையானது.





**PEPS** மார்பு, சுவாஸப்பை உபத்திரவங்களுக்கு மிகவும் இன்றியமையாத கிருமிநாசன மாத்திரைகள்

## நீங்கள் உங்கள் பற்களை

# இன்று **மக்ளீன்** செய்தீர்களா?



வருஷக் கணக்காக நான் மக்ளீன்ஸ் உபயோகித்து வருகிறேன். என் பற்கள் அழகாகவும் வெண்மையாகவும் இருக்கின்றன. நான் வேறு எந்த டூத் பேஸ்டும் உபயோகிக்கமாட்டேன்.

வாயைச் சுத்திகரித்து
மூச்சின் நாற்றத்தை
போக்குகிறது

உமிழ்நீர்
கெடுதலைத் தடுத்து
ஈறுகளைப் பாதுகாக்கிறது.

மேலே உள்ள கறைகளை அகற்றி
பற்களுக்கு
வெண்மை
தருகிறது

பளபளப்பாகவும் கவர்ச்சிகரமாகவும் தோன்றும் பற்களை அளிக்கவல்லதும், அத்துடன் அதிகமான சுத்தமும் பாதுகாப்பும் தரத்தக்கதுமான டூத்பேஸ்ட் உங்களுக்கு வேண்டுமானால் மக்ளீன்ஸ் பெராக்ஸைட் டூத்பேஸ்டையே உபயோகியுங்கள்.

பிரத்யேகமானதும் பிறர் பின்பற்ற முடியாததுமான தயாரிப்பு இது. வாயில் ஊறும் உமிழ்நீர் மூலம் பல் சொத்தை பிடிப்பதையும் பல்லோட பாசி படருவதையும் மக்ளீன் தடுத்து உதவுகிறது. பல்லின் மீது விகாரமான கறை படிந்திருந்தால் அதை அகற்றி விடும். பற்களை வெண்மையாக்கி, பளபளக்கச் செய்து சுவாசத்தை சுத்தமுடையதாக்குகிறது.

இன்றே மக்ளீன்ஸ்
வாங்குங்கள்!




MTX-1TM

# DORIC

## டோரிக்

உயர்ந்த ரக

## பேனாக்கள்

ஒன்றின்
விலை ரு. 6.



1. இதே அளவுள்ள இதர பேனாவை விட அதிகமான மசி கொள்ளும்.
2. மை கசியா உத்திரவாதம்.
3. கெட்டித் தங்கம் பூசிய இருடியம் தோய்த்த உறுதியான நிப்பு.
4. அநேக வித கவர்ச்சிகரமான கலர்கள்.
5. ஓர் டோரிக் தயாரிப்பு.

> உங்களுக்கு "டோரிக்" பேனாவினுள் ஏதேனும் பழுது ஏற்பட்டால் திருப்பி அனுப்பி இலவசமாக மாற்றுப் பேனாவை பெறுங்கள்.



**டோரிக் ப்ராடக்ட்ஸ்**

பாம்பே மியூச்சுவல் பில்டிங்,
ஹார்ன்பி ரோடு, பம்பாய்

REGD. No. M. 4392